## *1) ஆய்வு- ஒரு கடிதமும் விளக்கமும்*

*Greetings,*

*I’ve recently heard of your works through a friend but can’t read Tamil myself so..well,that is a temporary barrier.But the way this friend spoke of you,I felt like writing to you.*

*I’ve just finished my bachelors in Applied Psychology and am realizing I’m very keen about studying.I want to do a masters in Anthropology.It’s not that I’m interested in it.It’s more that I have to know about this culture I live in.And that’s the thing.I’m fascinated by the Universe and her potential.I really want to explore the deeper knowledge of human evolution.*

*I really hope you do reply.*

*Have a beautiful year ahead.*

*Regards,*
*Supriya Talupuru.*

அன்புள்ள சுப்ரியா

உங்கள் கடிதம் கண்டேன்

தமிழகச்சூழலில் இன்று நிகழ்ந்துவரும் முக்கியமான ஒரு வீழ்ச்சி என்பது தொழில்நுட்பம் அல்லாத துறைகளில் படிப்புக்கும் ஆராய்ச்சிக்கும் தகுதியானவர்கள் வருவதில்லை என்பதே. ஒரு மானுடவியல் ஆய்வாளர் பத்தாண்டுகள் ஆராய்ந்து ஒரு பதவிக்கு வந்து சம்பாதிப்பதை விட இருமடங்கை சாதரண பட்டப்படிப்பை கொண்டு தகவல் தொழில்நுட்ப துறையில் உள்ளவர்கள் சம்பாதிக்கமுடியும். ஊதியத்தை வைத்தே

மனிதர்களை அளவிடும் நடுத்தரச் சூழலில் பிந்தையவருக்கு மதிப்பு அதிகம். அதைவிட மோசம் அவரே தன்னைப்பற்றி அப்படி நினைத்தும் கொள்வார்.

ஆகவே அறிவியலிலும் சமூகவியல்துறைகளிலும் இரண்டம்நிலை மூன்றாம் நிலை மாணவர்களே வருகிறார்கள். அவர்களால் எதுவும் உருப்படியாகச் செய்யமுடிவதிலை. கோவை பாரதியார் பல்கலை துணைவேந்தர் சென்ற ஆண்டு அறிவியல் முனைவர் ஆய்வுகளின் தரம் எந்த அளவுக்கு பரிதாபமாக உள்ளது என்று சொல்லியிருந்தார். வரலாறு, சமூகவியல், இலக்கியம் துறைகளின் தரவீழ்ச்சி பற்றி நானே நேரடியாக அறிவேன். நல்ல ஆய்வுகள் எனச் சென்ற முப்பதாண்டுகளில் மிகச்சிலவற்றையே சொல்ல முடியும். வரலாற்றாய்வே இல்லாத நிலை.

ஆகவே மானுடவியலில் ஆர்வத்துடன் நீங்கள் செயல்பட விரும்புவது மிகவும் முக்கியமானது. ஆனால் இன்றைய சூழலில், திறமையற்றவர்களின் நடுவே பணியாற்ற நேர்வதென்பது மிகுந்த சோர்வளிக்கக் கூடியது. அவர்களின் பாதுகாப்பின்மையுணர்வும் தாழ்வுணர்வும் உருவாக்கும் சிக்கல்களைச்சந்திக்க நேரும். அதைத் துணிவுடன் எதிர்கொண்டாக வேண்டும். உங்கள் திறனிலும் உறுதியிலும் நம்பிக்கை இருந்தால் அது எளிதே. சாதனையாளர்கள் அனைவருக்கும் அதுவே பாதை

மானுடவியல் போன்ற துறைகள் இன்று முழுக்கமுழுக்க அரசியல்மயமாக்கப்பட்டுள்ளன. அவற்றை அரசியல் நோக்குடன் செய்பவர்களே அதிகம். ஆகவே அந்தப் பொது அலைக்கு எதிராக முறைமை என்ற புறவயமான தர்க்கத்துக்குள் நின்றபடி செய்யப்படும் ஆய்வுகளுக்கே உண்மையான மதிப்பு. அத்தகைய ஆய்வுகள் மட்டுமே காலத்தின் போக்கில் நீடித்து நிற்க முடியும். அந்த திடம் உங்களுக்குள் உருவாகட்டும்

கடைசியாக, மானுடவியல் சமூகவியல் போன்ற துறைகளில் ஒரு மேலாதிக்கம் உள்ளது. அதை ஐரோப்பிய மேலாதிக்கம் என்றே சொல்லலாம். இங்குள்ள வாழ்க்கை இங்குள்ள வரலாறு குறித்து அவர்கள் ஒரு முன்வரைவு வைத்திருக்கிறார்கள். அதை ஒட்டி ஒருவர் ஆய்வுசெய்து அதற்கேற்ற முடிவுகளை அளித்தால் மட்டுமே அவர்களால் அவர் பொருட்படுத்தப்படுவார். அமெரிக்காவிலோ ஐரோப்பாவிலோ சமூகவியல் சார்ந்த துறைகளில் ஆய்வு செய்பவர்கள்,செய்து மீண்டவர்கள் பெரும்பாலும் அனைவருமே இந்த கருத்தியல் மேலாதிக்கத்துக்கு தங்கள் மூளையை விற்ற அடிமைகள்தான்

*அதாவது இந்தியாவின் பண்பாட்டுக்கூறுகளை ஒன்றுடன் ஒன்று முரண்படக்கூடிய, ஒன்றை ஒன்று அழிக்கத்துடிக்கக்கூடியவை என்றே ஐரோப்பியமேலாதிக்க நோக்கு வரையறை செய்கிறது. அதற்கு மாறாக, அப்பண்பாட்டுக்கூறுகளை ஒன்றுடன் ஒன்று இணைந்து செயல்படக்கூடிய, ஒன்றை ஒன்று வளர்க்கக்கூடியவையாக உருவகித்து ஆராய்ச்சி செய்தால் அதை ஐரோப்பிய அறிவுலகம் ஏற்பதில்லை. அதை அடிப்படைவாதம் என்பாகள். பழமைவாதம் என்பார்கள். அல்லது வேறேதாவது ஒரு முத்திரையை குத்துவார்கள்.*

*ஐரோப்பிய -அமெரிக்க ஆய்வுச்சூழலில் உள்ள இறுக்கமான மேட்டிமைவாதம் பற்றி இப்போது பலரும் பேச ஆரம்பித்திருக்கிறார்கள். நான் பத்து வருடங்களாக அதைச் சுட்டிக்காட்டி வருகிறேன். இரண்டாவது தரப்பு பிழை என்றே இருக்கட்டும். ஆனால் ஒரு கருத்துப்பரிமாற்றத்தில் அதுவும் ஒரு தரப்பு தானே? அது ஏன் முரட்டுத்தனமாக அடக்கப்படுகிறது?*

*மேலைநாட்டுப் பல்கலை ஆய்வுலகம் காட்டும் ஜனநாயக முகமும் , புறவயமான அறிவியக்கம் மீதான பற்றும் போலியானது. கிறித்தவ மதவாதத்தாலும் வணிகஏகாதிபத்திய சக்திகளாலும் உள்நின்று செலுத்தப்படும் கருத்தியல் கட்டுமானங்கள் அப்பல்கலைகள். நம்முடைய இந்தியப் பல்கலைகள் அந்தப் பல்கலைகளில் கற்றுவந்த அடிமைகளாலும் அப்பல்கலைகள் உருவாக்கும் நூல்களாலும் நூற்றுக்கணக்கான பண உதவி முறைகளாலும் முழுமையாகக் கட்டுப்படுத்தப்படுகின்றன.*

*ஆகவே நம்முடைய அறிவுச்சூழல் இன்று முழுமையாகவே அடிமைப்பட்டுள்ளது. பல்கலைகளுக்கு வெளியே தன் சொந்த முயற்சியால் செய்யப்படும் ஆய்வுகள் மட்டுமே நேர்மையானவையாக உள்ளன.*

*ஆய்வு என்பது நம்மையும் நம் பண்பாட்டையும் கண்டுகொள்ளும் பயணம் என நீங்கள் நம்பினால் அதை நேர்மையாக எதிர்கொண்டாக வேண்டும். அதன் போராட்டங்களை நிகழ்த்தியாக வேண்டும். உடனடி லாபங்கள் குறையலாம். ஆனால் சுதந்திரமும் நேர்மையும் அதற்கான பலன்களை அளித்தாகவேண்டும். அத்தகைய ஓர் ஆய்வுக்குரலாக நீங்கள் ஆக என் வாழ்த்துக்கள்*

*ஜெ*

## *2) ஆய்வுலகின் அன்னியக்கரங்கள்*

*வணக்கத்திற்குரிய திரு.ஜெயமோகன் அவர்களுக்கு..*

*முகமறியாத உங்களின் பல வாசகர்களில் நானும் ஒருவன்.. பல ஆண்டுகளாக பல விசயங்கள் குறித்து உங்களுக்குக் கடிதம் எழுதவேண்டும் என்று நினைத்துக்கொண்டு இருந்தேன்.. இன்று எஸ்.வி.ராஜதுரை எழுப்பி இருக்கும் சர்ச்சை மூலமாக இக்கடிதம் சாத்தியப்பட்டு இருக்கிறது. நீண்டகாலமாக உயர்கல்வித்துறையோடு இணைந்திருப்பவன் என்ற முறையில் பல விசயங்களை என்னால் திட்டவட்டமாகச் சொல்லமுடியும்..*

*புதுதில்லியில் எனது உயர்கல்வி ஆய்வுப்படிப்பை நான் மேற்கொண்டு இருந்த நேரத்தில், (அதாவது சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால்) அங்கு உள்ள தேசத்தின் ஒரு முதன்மையான ஆய்வு நிறுவனத்தில் பேராசிரியராக இருந்த, இன்றும் இருக்கின்ற அரசியல் ஆய்வாளரோடு ஏற்பட்ட நட்பினால், அமெரிக்காவின் முதன்மையான பல்கலைக் கழகத்தில் பேராசிரியராக இருக்கும் ஓர் அமெரிக்கர் கள ஆய்வுக்காக வந்தபோது அவரது அறிமுகம் ஏற்பட்டது.. தனது ஆய்வுக்காக உதவிடும்படி கேட்டுக்கொண்டார். எனது நண்பர் செய்த ஏற்பாடு..!*

*அமெரிக்கரின் ஆய்வு இந்தியாவில் பிரிவினைவாத இயக்கங்கள் எப்படி கால ஓட்டத்தில் கரைந்தன..இந்தியா எப்படி பிரிவினைவாத சக்திகளை எவ்வாறு நீர்த்துப் போகச் செய்தது.. அதில் தமிழ்ப் பிரிவினைவாதமும் அடக்கம்..அதனால் என் நண்பர் என்னை அவரோடு கோர்த்துவிட்டார்..அது பற்றி எனது Ph.D. மேற்பார்வையாளராக இருந்த பேராசிரியரிடம் சொன்னேன்.. அவரும் தென் இந்தியர்தான்.. மாநில சுயாட்சி என்பது பற்றி அவருக்கு மித மிஞ்சிய கனவு இருந்தது.. அவரே சற்று அதிர்ந்து விட்டார்.. ஏன் சார் என்று கேட்டேன்.. அப்போது அவர் சொன்ன தகவல் கொஞ்சம் அதிர்ச்சி தருவதாக இருந்தது..*

*1970 கள் வரை, மேலை நாட்டு அறிவுஜீவிகளுக்கு இந்தியா எப்படியும் சிதறிவிடும் என்ற நம்பிக்கை இருந்தது. அதனால் இந்தியா எப்போது உடையும் எப்படி உடையும் என்பது போன்ற ஆய்வுகளுக்குப் பணம் தந்து வந்தனர்.. அதற்குப் பிறகு, பிரிவினை சக்திகள் எப்படி காணாமல் போயின.. அதற்கு இந்தியா செய்த காரியங்கள் என்ன என்பது பற்றி*

*ஆய்வு நடத்த பணம் தர ஆரம்பித்துவிட்டனர்.. என்று நக்கலாகவே சொன்னார்.. பெரும் அதிர்ச்சிக்கு ஆளானேன்.. அமெரிக்காவின் கொலம்பிய பல்கலைக்கழகம் மட்டும் கடந்த இருபது ஆண்டுகளில் இந்தியாவில் மேற்கொள்ளப்பட்டுவரும் எந்தமாதிரியான சமூக, அரசியல் ஆய்வுகளுக்கு பண உதவி செய்திருக்கிறது என்று பார்த்தாலே போதும். தலித் விடுதலை என்னும் போர்வையில், இந்த நாட்டின் மீது தலித் மக்களுக்கு வெறுப்பு வரவேண்டும் என்பது மட்டும்தான் அவர்களுக்கு ஒரே இலக்கு.*

*போர்டு பவுண்டேஷன் இந்தியாவின் பிற்படுத்தப்பட்ட, தலித், பழங்குடி மற்றும் முஸ்லிம் மைனாரிட்டி வகுப்பினருக்கு என்றே வரலாறு, சமூகவியல், அரசியல் போன்ற சமூக அறிவியல் துறைகளில் Ph.D. ஆய்வை மேற்கொள்ள ஐரோப்பிய அமெரிக்க பல்கலைக் கழகங்களில் இடமும் வாங்கித்தந்து பெரும் ஆய்வு நல்கைகளும் தருகின்றனர்.. என்ன நோக்கம்..!? இது போன்ற கேள்வியை எழுப்புவது ஒன்றும் தவறல்ல.. இந்தியாவின் ஏற்றத்தாழ்வு நிறைந்த பொருளாதார நிலை பற்றி, அரசியல் பற்றி ஆய்வு செய்யும் போது, ஒரு நாட்டின் மீதும் அதன் நெடிய வரலாறு மீதும் வன்மமும் வெறுப்பும் வரவேண்டும் என்று நினைப்பது எப்படி சரியாகும்.. பிரச்சினைக்கு சரியான தீர்வுக்கு நமது ஆய்வுகள் உதவிட வேண்டும்.. இவர்கள் நோக்கமே பிரச்சினையை ஊதி பெரிதாக்கி, அதில் குளிர் காய நினைக்கிறார்கள்.. இதுதான் உண்மை..*

*மிகவும் பிற்படுத்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த நான், மார்க்சிய லெனினிய கொள்கைகளில் பெரும் நம்பிக்கை வைத்திருக்கிறேன்..அதற்காக இதுமாதிரியான கேவலத்தை ஏற்க முடியவில்லை.. இந்த நாட்டின் கலாசாரம், வரலாறு பற்றி எந்த ஒரு புரிதலுமே இல்லாத இந்தக் கும்பலை தோலுரித்துக் காட்டவேண்டும்..*

*அன்புடன்*
*மு.விடுதலை.*
*மும்பை*

*அன்புள்ள விடுதலை,*

*இந்தியாவில் செய்யப்படும் வெளிநாட்டு ஆய்வேடுகளை மட்டும் சீராக வரிசைப்படுத்தி அவற்றின் ஆய்வுத்தலைப்புகளை நோக்கினால் இந்த ஆய்வுகளின் நோக்கம், அவற்றுக்கு இங்கே உதவிசெய்பவர்களின் இலக்கு எல்லாமே தெளிவாகிவிடும்.*

*அந்த ஆய்வாளர்கள்தான் இங்கே இந்திய அரசியல் பற்றியும் பொருளியல் பற்றியும் நம் நாளிதழ்களில் நிறைய எழுதுகிறார்கள். அந்த ஆய்வுகள் உருவாக்கும் தரவுகளின் அடிப்படையில் இந்தியாவைப்பற்றி அவர்களால் உருவாக்கப்பட்டுள்ள கோட்பாடுகள்தான் இங்கே கட்டுரைகளில் அதிகம் மேற்கோள் காட்டப்படுகின்றன.*

*ராமச்சந்திர குகா அவர்களின் நூலில் [காந்திக்குப்பின் இந்தியா] தொடர்ச்சியாக ஐம்பதாண்டுகளுக்கும் மேலாக இந்தியா உடைந்துவிடும் என ஆர்வமாக மேலைநாட்டு ஆய்வாளர்கள் காத்திருந்ததை விளக்குகிறார். அந்நூலே ஏன் அப்படி உடையவில்லை என்பதற்கான விளக்கம்தான்.*

*இந்தியாவில் வெளிநாட்டு அமைப்புகளின் உதவியுடன் நாட்டாரியல், மானுடவியல், சமூக அரசியல் தளங்களில் நிகழும் ஆய்வுகளில் பெரும்பகுதி பொதுவாக மூன்று 'அஜெண்டாக்களை' கொண்டதாகவே இருக்கும். அவற்றை மீறி, அந்த முன் சட்டகத்தை மறுத்து ஓர் ஆய்வை எவரும் செய்துவிடமுடியாது.*

*1. இந்தியா பண்பாட்டு ரீதியாக ஒரே நாடல்ல. இது பல தேசியங்களை ஒடுக்கி செயற்கையாக உருவாக்கப்பட்ட ஒரு தேசியம்.*

*2. இந்து மதம் என்பது அடக்குமுறையாலும் மோசடியாலும் உருவானது. அதன் மையமான பிராமணியம் பிற கூறுகளை அடக்குகிறது, அழிக்கிறது.*

*3. இந்தியாவிலுள்ள சாதியவேறுபாடு என்பது இன [Race] வேறுபாடு. ஆகவே தலித்துக்கள் மீதான ஒடுக்குமுறை என்பது சமூகப்பிரச்சினை அல்ல இனப்பிரச்சினை.*

*இவற்றை நிரூபிக்கவே மீண்டும் மீண்டும் இந்த ஆய்வுகள் எழுதப்படுகின்றன. இங்குள்ள அறிஞர்கள் அந்த ஆய்வுகளின் தரவுகளைக் கொண்டு நூல்களை உருவாக்குகிறார்கள். அந்நூல்கள் மூலநூல்களாக மேலைநாடுகளில் அங்கீகரிக்கப்படுகின்றன. அவை அவர்களால் மேற்கோள் காட்டப்படுகின்றன.*

எஸ்.வி.ராஜதுரையின் ‘இந்து இந்தி இந்தியா’ என்ற நூலை மட்டும் வாசித்தாலே போதும். இந்திய தேசியம் ஒரு மோசடி, அது உடைந்து இந்தியா துண்டாகவேண்டும் என ஆவேசத்துடன் வாதிடுகிறது இந்நூல்.

மறைமுகமாக தமிழின் சிற்றிதழ் இயக்கமே இந்தக் கருத்துக்கள், கருத்துக்களை உருவாக்கும் அமைப்புகள், அவற்றின் நிதிப்பின்னணியின் பிடியில்தான் உள்ளது. இந்தியதேசிய எதிர்ப்பு , இந்தியப் பண்பாட்டு நிராகரிப்பு என்பது நம்முடைய சிற்றிதழ்கள், சிற்றிதழ் எழுத்தாளர்களின் பொதுவான குரல்.

அவற்றை மீறி இந்தியா முன்னகர்கிறது.

ஜெ

## *3) ஆய்வும் மேற்கும்*

*திரு. ஜெயமோகன் அவர்களுக்கு:*

*சுப்ரியாவுக்கு நீங்கள் அளித்த பதிலில் "மேலைநாட்டுப் பல்கலை ஆய்வுலகம் காட்டும் ஜனநாயக முகமும் , புறவயமான அறிவியக்கம் மீதான பற்றும் போலியானது" என்று குறிப்பிட்டீர்கள். மேலும், "அமெரிக்காவிலோ ஐரோப்பாவிலோ சமூகவியல் சார்ந்த துறைகளில் ஆய்வு செய்பவர்கள்,செய்து மீண்டவர்கள் பெரும்பாலும் அனைவருமே இந்தக் கருத்தியல் மேலாதிக்கத்துக்கு தங்கள் மூளையை விற்ற அடிமைகள்தான்" என்றும் சொல்லியுள்ளீர்கள்.*

*அமெரிக்காவின் பல்கலைக்கழகங்களில், குறிப்பாகக் கலையின் வரலாற்றுத்துறையில் (History of Art) இந்தியக்கலைகள் குறித்து, இந்திய நாகரிகம் குறித்தும் பெருமதிப்பு கொண்டுள்ள பலரை நான் சந்தித்திருக்கிறேன். நான் அறிந்த வரையில் Orientalism வகுத்துள்ளபடி மேற்கத்திய மேலாதிக்கத்தோடு, இந்தியாவை இழிந்த நோக்கோடு காண்பவர்களாய் எனக்குப் புலப்படவில்லை.*

*முனைவர் பட்டம் பெற்ற என் அமெரிக்க மனைவியின் ஆராய்ச்சி வழிகாட்டி ஆதிகாலத்து இந்து, மற்றும் புத்த மத சிற்பங்களின் ஆய்வில் நாற்பதாண்டு காலங்களாய் ஈடுபடுபவர்; புத்தரின் சிற்பங்களை வடிக்க இந்தியர்கள் கிரேக்கர்கள் மூலமே கற்றறிந்தனர் எனும் மேற்கத்திய வாதத்தைத் தகர்த்தெறிந்தவர். மற்றொரு நண்பர் தர்மசாத்திரங்களையும், சைவ சித்தாந்தத்தையும் இருபது வருடங்களாய் ஆராய்பவர். என் மனைவியின், மதுரை மீனாட்சியம்மன் கோவிலையும், சிதம்பரத்தின் நடராஜர் கோவிலையும் எவ்வாறு திருமலை நாயக்கர் திருவிளையாடற்புராணம் துணை கொண்டு திறமையாக ஒருங்கிணைத்தார் என்பதான ஆய்வு இவ்வூர்ப் பல்கலைக்கழகத்தின் பாராட்டைப் பெற்றது.*

*இவ்வுதாரணங்களை நான் கொடுப்பது, இங்குள்ள பல்கலைக்கழகங்களில் பலர் இந்தியா, மற்றும் இந்தியக்கலாச்சாரம் குறித்தும் நடுநிலையோடு அணுகுகிறார்கள் என்பதுதான்.*

*கீழை நாடுகள் குறித்து மதிப்பேதும் இல்லா ஆராய்ச்சியாளர்கள் கண்டிப்பாக இருக்கலாம், ஆனால் அவர்கள் பெரும்பான்மையில் இல்லை என்பது என் கருத்து.*

*மேலும் பல்கலைக்கழகங்களில் கிறித்துவ மதவாத சக்திகள் ஆதிக்கம் செலுத்துகின்றன என்பது குறித்து என்னால் உடன்பட முடியாது. அமெரிக்க பல்கலைகழகங்களில் நாத்திகர்களே அதிகம். பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் மதங்களுக்கு முக்கியத்துவம் இல்லாத காரணங்களினால் கிறித்துவ மதவாதிகள் தங்கள் பிள்ளைகளுக்கு "home-schooling" முறையில் கல்வி கற்பிக்கும் நிலையில் உள்ளனர்.*

*இங்கு குறிப்பிடவேண்டிய விஷயம் இந்தியாவை ஆராய்பவர்களிடம் இந்திய அரசு கொண்டுள்ள அணுகுமுறை. இந்தியா, மற்றும் அதன் கலாச்சாரம் பற்றிய ஆராய்ச்சிகளுக்கு நம் அரசு எந்த ஊக்கமும் அளிப்பதில்லை என்பது தான். சீன அரசு அமெரிக்கா முழுவதும் சீன மொழியைக் கற்பிப்பதற்காகப் பல கலாச்சார மையங்களை அமைத்துள்ளது. ஆனால் இங்கு தமிழையும், சமஸ்கிருதத்தையும் கற்பிக்கும் பணி கோயில்களாலேயே செய்யப்படுகின்றது, நம் அரசின் எவ்வொத்துழைப்பும் இல்லாமல்.*

*சீனப்பொருளாதார வளர்ச்சியினால் சீனக்கலைகள் குறித்தும், அதன் கலாச்சாரம் குறித்தும் மேலையில் உருவாகியுள்ள கவனம், சிறிது காலத்தில் இந்தியா குறித்தும் ஏற்படவேண்டும் என்பதே என் ஆவல்.*

*அன்புடன்,*

*கார்த்திகேயன் வாழ்க்குடை*

*அன்புள்ள கார்த்திகேயன்,*

*நான் ஒருபோதும் ஐரோப்பாவோ, அமெரிக்காவோ இந்தியப் பண்பாட்டை சாதகமாக நோக்கியதே இல்லை என்று சொல்லவில்லை. ஒரு கருத்தை எப்போதும் அதன் மறு எல்லைக்குக் கொண்டு செல்ல வேண்டம் என்று கோருகிறேன். இந்தியவியலில் பல*

முக்கியமான ஆய்வுகளைச் செய்த ஐரோப்பிய, அமெரிக்க அறிஞர்கள் உள்ளனர்.நானே அவர்களில் பலரை மேற்கோள் காட்டியும் வருகிறேன்.

நான் இந்திய மரபிலக்கியம்,வரலாறு, நாட்டுப்புறவியல் குறித்த ஐரோப்பிய, அமெரிக்க ஆய்வுகளைத் தொடர்ச்சியாகக் கவனித்து வருபவன்.நான் சொல்வது அவ்வகையில் நான் அடைந்த பொதுவான ஒரு புரிதல். இதற்கு விரிவான புள்ளி விவரங்கள் தேவை என்றால் சிலமாதங்கள் அவற்றைக் கணக்குப் போட வேண்டும். போட்டு எழுதினாலும் வேறு புள்ளிவிபரங்கள் கொடுத்து மறுத்து விடலாம்.

ஒருவருக்கு மேற்குலகம் எந்தவித அரசியலும் இல்லாத சமநிலையான அறிவியல் பூர்வமான பண்பாட்டாய்வுகளை மட்டுமே நிகழ்த்துகிறது என்ற நம்பிக்கை இருக்குமென்றால் அது மதநம்பிக்கை போன்றது. அதனுடன் விவாதிப்பதில் அர்த்தமே இல்லை.

மற்றபடி மேற்கு நம் மீது வைக்கும் முன்முடிவுள்ள பண்பாட்டு-வரலாற்று ஆய்வுகளை இரு தளங்களில் ஒரு வாசகன் அடையாளம் கண்டுகொண்டே செல்லலாம். தொடர்ச்சியாக இந்தியாவின் பண்பாட்டுத்தேசியம், தேசிய மையச்சரடு, பண்பாட்டு உரையாடல்மூலம் உருவான சமரசம் போன்றவற்றுக்கு எதிரான கருத்துக்கள் கொண்ட ஆய்வுகள்தான் வந்தபடியே இருக்கும்.

அவர்களின் நோக்கில் இந்தியா உக்கிரமான முரண்பாடுகள் மட்டுமே கொண்ட ஒரு நிலப்பரப்பு. இனமுரண்பாடுகள்,பண்பாட்டு முரண்பாடுகள். இந்தியாவின் கடந்த காலம் சுரண்டலால் ஆனது, அதன் பண்பாடு அந்தச் சுரண்டலின் விளைவு. இந்தியாவின் பண்பாடும் வரலாறும் தேக்கநிலை கொண்டவை. அந்தத் தேக்கநிலைக்கு இந்துமதமும் இந்துப்பண்பாடும் அடிப்படைக் காரணங்கள்.

நான் சற்று அப்பட்டமாக ஆக்கிச் சொல்கிறேன். பெரும்பாலான ஆய்வுகள் கடைசி முடிவாக சுற்றிச்சுற்றி இந்தப் பார்வையையே முன்வைக்கும். ஒவ்வொரு பகுதியிலும் இந்த மேனாட்டு ஆய்வுகள் முரண்பாடுகளை மட்டுமே கண்டு கொள்வதைக் காணலாம்

நான் சமீபத்தில் கண்டு மனச்சோர்வடைந்த விஷயத்தை இங்கே சொல்கிறேன். சமணத்துக்கும் இந்துமதத்துக்குமான முரண்பாட்டை ஒருவகை ரத்தக்களரியான

போராட்டமாகவே அனேகமாக எல்லா ஐரோப்பிய அமெரிக்க ஆய்வுகளும் காட்டுகின்றன. மாறான ஆய்வு ஏதாவது வந்திருந்தால் எனக்குத் தகவல் கொடுங்கள்.

ஆனால் நடைமுறையில் சமணம் தொடர்ந்து இந்துமதத்துடன் குறிப்பாக வைணவத்துடன் ஓர் உரையாடலில்தான் இருந்துள்ளது. மெல்லமெல்ல வைணவத்தை சமணம் உள்ளிழுத்துக்கொண்டது. சமணத்தின் பல பண்பாட்டுக்கூறுகளை வைணவம் உள்ளிழுத்துக்கொண்டது. ஒரு கட்டத்தில் அவை இரட்டை மதங்களாகவே ஆயின. ஒருவர் ஒரே சமயம் தத்துவார்த்தமாக சமணராகவும், வழிபாட்டுரீதியாக வைணவராகவும் இருக்க முடியுமென்ற நிலை வந்தது.இன்றுகூட நாம் சமண ஆலயங்களில் இந்த இணைப்பைக் கண்கூடாகக் காணலாம். வைணவ தெய்வங்கள் இல்லாத சமண ஆலயங்களே இல்லை.

முரண்பாட்டை மட்டும் விரித்துரைக்கும் மேனாட்டு ஆய்வாளர்கள், இல்லாத முரண்பாடுகளைத் தேடி அலையும் அறிஞர்கள் இந்த உரையாடலையும், இணைப்பையும் கூடவே சொன்னால் என்ன என்பதுதான் எளிமையான வினா. ஆனால் இந்த வினாவை முன்வைக்கும் ஓர் இந்திய ஆய்வாளரை ஏளன நோக்கில் ‘தேசியவாதி’ என்று தள்ளி விட்டுச் சென்று விடுவார்கள்.

இன்னொரு உதாரணம். சமீபத்தில் அஜந்தா குகைகள் பற்றிய ஒரு வாசிப்பை மேற்கொண்டேன். மிச்சிகன் பல்கலை ஆய்வாளரான Walter M. Spink என்பவரின் ஆய்வுகள் சிக்கின. அவரது ஆய்வுகளை பௌத்தப் பண்பாடு மீதான கீழ்த்தரமான தாக்குதல்கள் என்றே நான் எடுத்துக்கொள்வேன். எந்தவகையான அறிவியல் நோக்கும் இல்லாத, வரலாற்றுப் பார்வையும் இல்லாத அதிரடிக் கருத்துக்கள் அவை.

ஸ்பிங்க் அஜந்தா குகைகளுக்கும் பௌத்த வழிபாட்டுக்கும் சம்பந்தமில்லை என்கிறார். அவை வணிகர்கள் தங்கிப் போவதற்காகக் கட்டப்பட்ட கேளிக்கை மையங்களாம். அந்த ஓவியங்கள் வணிகர்களின் மனமகிழ்ச்சிக்காக வரையப்பட்டவை. மன்னர்கள் அந்த குகைகளை வணிகர்களை குஜால்படுத்த செதுக்கிக் கொடுத்தார்களாம். மொத்தக் குகைகளும் வெறும் இருபதாண்டுக் காலத்தில் வாகாடகர் ஆட்சிக்காலத்தில் [கிபி 460 முதல் 480 வரை] செதுக்கப்பட்டவை என்கிறார்

அப்படிச் சொல்லக் கூடாதென்றில்லை, அது ஒரு தரப்பு. ஆனால் அந்தத் தரப்பு மேனாட்டுப் பல்கலைக்கழகங்களில் பெற்ற வரவேற்பு போல எரிச்சலூட்டுவது

வேறில்லை. இன்று அஜந்தா பற்றிய எந்த மேனாட்டு ஆய்வேட்டிலும் ஸ்பிங்தான் முதன்மையாக மேற்கோள் காட்டப் படுகிறார். ஏன் விக்கிப்பீடியாவையே பாருங்கள், அஜந்தாவை உருவாக்கியவரே அவர்தான் என்ற வகையில் மேற்கோள் மழை தெரியும்

இந்தியாவின் சுவரோவிய மரபை அடிப்படையாகக் கொண்டு, அஜந்தாவின் சிலைகளையும் ஓவியங்களையும் அடிப்படையாகக் கொண்டு வால்ட்டர் ஸ்பிங்கின் கூற்றுக்களை முழுமையாக மறுத்திருக்கிறார்கள். இந்தியாவில் எங்கும் கேளிக்கைக்கூடங்களில் தெய்வச்சிலைகள் இருப்பதில்லை.அது அடிப்படையான இந்திய வாழ்க்கை நோக்குக்கே எதிரானது. அதைச்சொன்ன அனைவருமே தேசியவாதிகள் என எள்ளிப் புறமொதுக்கப்பட்டார்கள்.

வால்ட்டர் ஸ்பிங்க் வழியாகவே இனி உலகம் அஜந்தாவைப் பார்க்கும். பார்த்துக்கொண்டே இருங்கள் கால்நூற்றாண்டுக்குள் சர்வதேச ஆவணங்கள் அனைத்திலும் அவரது அரைவேக்காட்டுக்கருத்துக்களே பதிவாகியிருக்கும். இந்தியாவின் கூலி ஆய்வாளர்கள் எல்லாரும் அதைத்தான் மேற்கோள் காட்டுவார்கள்

நம் பண்பாட்டைப்பற்றி நம்மிடமே திரித்துச் சொல்லி அதைப்பரப்ப நம்மிடையே கூலிப்படையை உருவாக்குவதன் உண்மையான நோக்கம் என்ன என்பதே என்னுடைய கேள்வி. தேசியவாதி என்ற முத்திரைவழியாக இந்த ஏகாதிபத்தியவாதிகள் உருவாக்கும் இளக்காரம் பற்றியதே என் கேள்வி.

அந்த முத்திரைக்குக் கண்மூடித்தனமான நம்பிக்கை கொண்டவர், அறிவியல்ரீதியான நோக்கு இல்லாதவர் என்று பொருள். அந்த ஆய்வாளரின் ஆய்வுகள் அதன்பின் எங்குமே அதிகாரபூர்வமானதாகக் கருதப்படாது. என்னிடம் தனிப்பட்டமுறையில் இதைச்சொல்லிக் குமுறிய பத்து மூத்த ஆய்வாளர்களையாவது நான் அறிவேன்.

இந்த ஒட்டு மொத்தப்போக்கு ஆராய்ச்சிக்காகச் செல்லும் இளம் மாணவர்களை அடிமையாக்கி விடுகிறது. அதற்கு அடிமையானாலொழிய ஆய்வுக்கு அங்கீகாரம் கிடைக்காது என்ற கட்டாயம் சிலரை வீழ்த்துகிறது. பெரும்பாலானவர்கள் அதுதான் அறிவியல்ரீதியான அணுகுமுறை என்ற மாயைக்குள் சிக்கி மெல்லமெல்ல அதன் பிரச்சாரகர்களாக ஆகிவிடுகிறார்கள்

*நான் கேட்பது பிரசுரமான ஆதாரங்களை. கைக்குச்சிக்கும் ஆய்வுகளை. எந்த ஒரு களத்தில் ஆராயப் புகுந்தாலும் என் கைக்குச்சிக்கும் ஆய்வுகளில் நூற்றுக்குத் தொண்ணூறு பங்கு இந்தியா பற்றியும் இந்து மதம் பற்றியும் எதிர்மறையான முன்முடிவுகளை மட்டுமே முன்வைப்பவையாக இருக்கும் யதார்த்தத்தைப்பற்றி நான் பேசுகிறேன். அதற்கு அங்கே ஒருவர் அப்படிச் சொல்கிறார், இங்கே ஒருவர் இப்படி எழுதியிருக்கிறார் என்பதல்ல பதில்.*

*இதை அமெரிக்க-ஐரோப்பியப் பல்கலைகள் அறியாமல் செய்கிறார்கள் என்று நம்ப நான் தயாராக இல்லை. அப்பல்கலைகள் செயல்படும் விதம் அனைவருக்கும் தெரிந்ததே. தொழில்நுட்ப ஆய்வு உட்பட அனைத்துத் தளங்களிலும் தனியார்நிதி சார்ந்தே ஆய்வுத்துறைகள் செயல்படுகின்றன. அந்த நிதிகளை அளிப்பவர் யார், ஏன் அளிக்கிறார்கள் என்று ஆராயும் ஒருவர் மிக எளிதில் அதன்பின்னுள்ள மத அரசியலையும் ஆதிக்க அரசியலையும் கண்டு கொள்ளலாம். கண்களை மூடிக்கொள்வது அவரவர் விருப்பம்*

*என்னளவில் நான் என்னுடைய தர்க்க புத்திக்கு நிறைவளிக்கும்படி இவ்விஷயங்களைத் தேடி ஆராய்ந்திருக்கிறேன். அமெரிக்க பண்பாட்டு மானுடவியலாளரான Cora Du Bois அமெரிக்க பல்கலைகளில் மானுடவியல் ஆய்வுகள் எப்படி திடீரென்று பெருகின, அதற்குப்பின்னால் இருந்த நிதியூட்ட அரசியல் என்ன என்பதைப்பற்றி எழுதிய விரிவான அறிக்கை ஒன்றை 1987ல் நான் மொழியாக்கம் செய்திருக்கிறேன். சுருக்கமாகத் தமிழிலும் பிரசுரமாகியிருக்கிறது.*

*என்வரையில் நான் எனக்கு உறுதியாகத் தெரியும் விஷயங்களையே சொல்கிறேன். இந்தியப்பண்பாடு, இந்துமதம் பற்றிய ஐரோப்பொ-அமெரிக்கப் பல்கலை நோக்குகளை, அவர்களின் நிதி பெற்று அவற்றை அங்கே விழுங்கி அப்படியே இங்கே கக்கும் நம்மூர்க்காரர்களைக் கொஞ்சம் கவனிக்கும் எவருக்கும் கண்ணெதிரே பாறைபோல நிற்கும் இந்த உண்மை தெரியவரும்.*

*வேண்டுமென்றால் நீங்கள் இந்தியாவில் ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதிக்கொண்டிருக்கும் மேனாட்டுப்பல்கலைகளின் தொடர்புள்ள ஆய்வாளர்கள் என்று ஒரு நூறுபேரை எடுத்துக்கொள்ளுங்கள். அத்தனைபேரும் கிட்டத்தட்ட அரசியல்கட்சியின் தொண்டர்களைப்போல ஒரேகுரலில் பேசக்கூடியவர்கள்.*

*அத்தனைபேரும் சுதந்திரமாக ஆய்வுசெய்து அந்த ஒரேகுரலை அடைந்திருக்கிறார்கள், காரணம் அவர்கள் சொல்வது புறவயமான கல்தூண்போன்ற உண்மை என்று சொல்லமாட்டீர்கள் என நினைக்கிறேன்.*

ஜெ

## *4) அன்னியநிதி – ஒரு வரைபடம்*

*இந்த இணையதளத்தில் கருத்துலகில் வரும் அன்னிய நிதியையும் அதன் பாதிப்பையும் பற்றி நான் எழுதி சர்ச்சைக்குள்ளான விஷயங்களை ஒருவாறு தொகுத்து முடித்துக்கொள்ள விரும்புகிறேன். ஓர் எல்லைக்கு மேல் இதைப்பற்றிப்பேசினால் வெறும் வம்புகளே எஞ்சும் என்பதனால்.*

*சோவியத் ருஷ்யாவின் உடைவுக்குப்பின், உலகமயமாதல் தொடங்கியபின், தொண்ணூறுகளின் நடுவில் தமிழ்ச் சிற்றிதழ்ச்சூழலிலும் இலக்கிய-அரசியல் கோட்பாட்டுச்சூழலிலும் ஒரு திட்டவட்டமான மாற்றம் தென்பட ஆரம்பித்தது. பல சிற்றிதழ்சார் எழுத்தாளர்கள் கருத்தியல் தளத்தில் சடாரென்று ஒரு 'யூ டர்ன்' அடித்தார்கள். இதை பழைய இதழ்களின் தொடர்ச்சியை கவனிப்பவர்கள் காண முடியும்.*

*அதன் பின்னணி இதுதான். ருஷ்ய அமெரிக்க கெடுபிடிப்போர் காலத்தில் தமிழ் கருத்தியல்சூழலில் இரு அணிகள் இருந்தன. ஒன்று சோவியத்சார்பு அணி. இரண்டு அதை ஏற்காதவர்களின் அணி. இரு தரப்பிலும் நிதி வந்துகொண்டிருந்தது. அவை அவ்வளவு ரகசியமாகவும் இல்லை. நிதியுதவியும்கூட பெரிய அளவிலும் இல்லை.*

*சோவியத் அணி இஸ்கஸ் போன்ற அமைப்புகள் வழியாகவும் இங்குள்ள இடதுசாரிகளின் அமைப்புகள் வழியாகவும் எழுத்தாளர்களைத் திரட்டியது. சாதாரணமாக அவர்களிடமிருந்து எழுத்தாளர்கள் பெற்றது இடதுசாரிகளின் கட்டுப்பாட்டில் இருந்த பல்கலைக் கழகங்களின் கருத்தரங்குகளில் பங்கெடுக்கும் வாய்ப்பு. இடதுசாரி நூல்களை மொழியாக்கம் செய்வதன் ஊதியம். இவை கொஞ்சம் பெரிதாகவே இருக்கும். தி.க.சிவசங்கரன் போன்ற சிலர் ருஷ்ய அமைப்புகளில் பெரும் சம்பளத்துடன் பணியாற்றும் வாய்ப்பையும் பெற்றனர்.*

*இத்தரப்பின் உச்சகட்ட லாபம் என்பது சோவியத் ருஷ்யாவுக்கு ஒரு பயணம். ஆனால் இதெல்லாம் மிக வெளிப்படையானவை. ஜெயகாந்தன் போன்றவர்கள் வெளிப்படையாகவே அன்றுமின்றும் அதில் ஈடுபட்டார்கள். அதை ஒரு பெருமையாகவே முன்வைத்தார்கள், வைக்கிறார்கள். அது கொள்கைசார்பானது என்றே கருதப்பட்டது.*

வலதுசாரித்தளத்தில் இந்த அளவுக்கு வெளிப்படைத்தன்மை இருக்கவில்லை. ஆனால் இடதுசாரிக் கருத்துக்களுக்கு எதிரான செயல்பாடுகளுக்கு அமெரிக்க நிறுவனங்கள் பணம் அளித்தன என்பது உண்மை என்றே நான் நினைக்கிறேன். பேர்ல் பப்ளிகேஷன் மூலம் செய்யப்பட்ட மொழியாக்கங்கள் வழியாக பணம் அளிக்கப்பட்டிருக்கிறது . பல்வேறு மொழியாக்க வாய்ப்புகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. இவை எவையும் பெரிய தொகை அல்ல. ஆனால் அதற்கொரு பங்களிப்பு இருந்திருக்கலாம்.

இந்தியாவின் சில இதழ்களுக்கும் சில அமைப்புகளுக்கும் அமெரிக்கக் கலாசார அமைப்புகளிடமிருந்து பணம் வந்திருக்கிறது. அந்தக் கலாசார அமைப்புகளுக்கு அமெரிக்க உளவுத்துறை பணம் கொடுத்த தகவல்கள் பின்னர் வெளிவந்தன. ஆனால் எழுத்தாளர்களுக்கு அனேகமாக பணம் ஏதும் வந்ததில்லை என்றே நான் நினைக்கிறேன். ஏனென்றால் அவர்கள் அமெரிக்கர்களால் பெரிதாகக் கருதப்படவில்லை.

ஆனால் நான் விசாரித்தவரை அன்று தீவிரமாக கம்யூனிச எதிர்ப்பு பேசிய இதழாளர்களுக்கு பணம் வந்திருக்கிறது. அவர்களின் கட்டுரைகள் ஆங்கில இதழ்களில் மறுபிரசுரம் செய்யப்படுவதன் வழியாக. வரும் பணம் கணிசமானதே. வெளிநாட்டுப்பயண அழைப்புகள் அமெரிக்காவின் மிகப்பெரிய தூண்டிலாக இருந்திருக்கின்றன. ஆனால் பல்கலை அழைப்புகளை இதில் சேர்க்கமுடியுமா என்பதெல்லாம் சிக்கலான கேள்விகள்.

ஃபோர்டு ஃபவுண்டேஷன், ராக்ஃபெல்லர் ஃபவுண்டேஷன் போன்ற பல அமைப்புகள் ஐம்பதுகள் முதலே இந்தியாவில் பண்பாட்டு நடவடிக்கைகளுக்கு தொடக்கமிட்டிருந்தன. பல்வேறு ஆக்கபூர்வப் பணிகளுக்கு அவை உதவியிருக்கின்றன. அவற்றிடமிருந்து படைப்பாளிகள் பலர் சிறிய நிதியுதவிகள் பெற்றிருக்கின்றார்கள். அவற்றின் நடவடிக்கைகள் பெரும்பாலும் வெளிப்படையானவையாகவே இருந்தன.

இடதுசாரிகள் இந்த அமெரிக்கநிதியை எப்போதுமே பூதாகரமாகச் சொல்லி வந்திருக்கிறார்கள். திட்டவட்டமான ஆதாரமேதும் சொல்லப்படாமலேயே தொடர் அவதூறாக இந்தக் குற்றச்சாட்டை நிலைநிறுத்தியிருக்கிறார்கள். க.நா.சு., வெங்கட் சாமிநாதன் போன்றவர்கள் பற்பல வருடங்கள் தொடர்ந்து இந்த அவதூறின் நிழலில் வாழ்ந்தனர். கிட்டத்தட்ட நிராதரவாக பிறர் கொடைகளில் வாழ்ந்த க.நா.சு. 'சிஐஏ சீமான்' என்று இடதுசாரிகளால் சொல்லப்பட்டார். அவர் சொந்தமாக ஒரு போர்டபிள் டைப்ரைட்டர் வைத்திருந்தது ஆதாரமாகக் கொள்ளப்பட்டது.

அது கடைசிவரைக்கும்கூட அவருக்கு கடுமையான மனவருத்தம் அளிப்பதாக இருந்தது. நான் முதன்முதலாக அவரைச் சென்னையில் சந்தித்தபோது ஒருவர் அவரை காபி சாப்பிட அழைத்தார். 'பில்லை நீங்கதான் குடுக்கணும்...எனக்கு சிஐஏ மணியார்டர் இன்னும் வரலை' என்று வருத்தமான சிரிப்புடன் சொன்னார். எனக்கு பாவமாக இருந்தது. இன்று தங்கள்மீது திட்டவட்டமான குற்றச்சாட்டு வரும்போது மிகையுணர்ச்சிகொள்ளும் இதே இடதுசாரிகள்தான் க.நா.சு. போன்ற மேதைகளை திட்டமிட்டு அவமதித்தனர்.

தமிழில் வெளிவந்த சிற்றிதழ்கள் எல்லாமே இடதுசாரிகளால் இவ்வாறு அவதூறு செய்யப்பட்டு அவமதிக்கப்பட்டுள்ளன. காகிதப்பொம்மைகள் செய்து விற்று வாழ்ந்த சி.சு.செல்லப்பா நடத்திய எழுத்து சி.ஐ.ஏ.யின் நிதியால் நடப்பது என்றார்கள். கணையாழி சி.ஐ.ஏ. இதழ் என்றார்கள்.

கெடுபிடிப்போர் காலகட்டத்தில் இந்தியாவுக்கான அமெரிக்க நிதியை பெருமளவுக்குப் பெற்றவர்கள் இந்துத்துவ அமைப்புகள் என்று என்னிடம் இந்துத்துவ இயக்கத்தில் முன்பிருந்த ஓர் இதழாளர் சொல்லியிருக்கிறார். டி.பி.டெங்கடியின் பாரதிய மஸ்தூர் சங்க் நிதி பெற்று உருவானது என ஒரு பரவலான பேச்சு அன்று இருந்தது. அது உண்மையாக இருக்கலாம். இடதுசாரி 'அபாயத்துக்கு' எதிரான ஒரு கொள்கை நடவடிக்கையாக அது பெறப்பட்டிருக்கலாம்.

தொண்ணூறுகளிலேயே இந்தியாவுக்கான இடதுசாரி நிதி நின்றுவிட்டது. சோவியத் கலாசார மையங்கள் பல இடங்களில் மூடப்பட்டன. கெடுபிடிப்போர் மறைந்ததும் அமெரிக்க நிதியும் இல்லாமலாகியது. ஆகவே இந்திய சிந்தனைச்சூழலில் ஒரு பெரிய 'வெற்றிடம்' ஏற்பட்டது. அந்த இடத்தை பல்வேறு தன்னார்வக்குழுக்கள் ஆக்ரமிக்க ஆரம்பித்தன.

எண்பதுகள் முதலே தன்னார்வக்குழுக்கள் இந்தியாவில் செயல்பட்டுவந்தாலும்கூட தொண்ணூறுகளில்தான் அவை காளான்போலப் பரவின. தொண்ணூறுகளுக்கு முன்னர் இந்தியாவில் தன்னார்வக்குழுக்கள் நேரடியாகவே கிறித்தவ அடையாளம் கொண்டவையாக, கிறித்தவ சபைகளின் கண்காணிப்பில் உள்ளவையாக இருந்தன. இவற்றை WACC போன்ற அமைப்புகள் ஒருங்கிணைத்தன. கேரளத்தில் இடதுசாரிகளின் முதல் ஆட்சிக்கு எதிரான இவர்களின் போராட்டத்திற்குப்பின் இடதுசாரிகள் இவர்களை எப்போதும் கண்காணிப்பின் நிழலிலேயே வைத்திருந்தனர். ஆனால் தமிழகத்தில் அப்படி இருக்கவில்லை.

அப்போதே தமிழகத்தின் சில எழுத்தாளர்கள் இவ்வமைப்புகளுடன் தொடர்பில் இருந்திருக்கிறார்கள். இவ்வமைப்புகள் பெரும்பாலும் கிராமப்புறங்களில் சேவைகள் செய்வது, அதையொட்டி மதமாற்றப்பணிகளில் ஈடுபடுவது ஆகியவற்றையே செய்துவந்தார்கள். அவற்றுடன் சம்பந்தப்பட்ட எழுத்தாளர்கள் சிறு ஊதியம் பெறுவது இயல்பான ஒன்றாகவே இருந்தது. உண்மையான சமூகசேவைகளையும் இவர்கள் செய்துவந்தார்கள்.

தொண்ணூறுகளின் வெற்றிடத்தை இந்த தன்னார்வக்குழுக்கள் விஸ்வரூபம் எடுத்து நிரப்பினர். இப்போது தன்னார்வக்குழுக்களின் முகம் மாறிவிட்டிருந்தது. அவை முற்போக்குப் பாவனைகள் கொண்டவையாக, மக்கள் பிரச்சினைகளுக்கு நேரடியாக போராடக்கூடியனவாக உருவம் கொண்டன. அதாவது அவை இடதுசாரி முகமூடியை அணிந்துகொண்டன. தன்னார்வக்குழு என்பதற்குப் பதிலாக செயலார்வக்குழு என்று தங்களைச் சொல்லிக்கொண்டார்கள். மனிதஉரிமை, கிராமமறுமலர்ச்சி போன்ற திட்டங்களை முன்வைத்தார்கள்.

WACC போன்ற அமைப்புகள் இங்கே பிரம்மாண்டமாக வலைவிரிக்க ஆரம்பித்தது இக்காலகட்டத்திலேயே. அவற்றின் பணிகளுக்கு பெரும்நிதி வர ஆரம்பித்தது. அவற்றின் நிர்வாகிகள் மாபெரும் வணிகநிறுவனத் தலைவர்களின் வாழ்க்கையை மேற்கொள்ள ஆரம்பித்தனர். சக்கரவர்த்திகளைப்போல அவர்கள் உலாவர தொழுதுண்டுபின்செல்லும் கூட்டம் ஒன்று உருவானது. அவர்களின் நேரடித்தலையீடு எழுத்தில், சிந்தனையில் நிகழ்ந்தது. ஒருபோதும் அப்படி ஒரு நிலை முன்பிருந்ததில்லை.

அது ஓர் ஆச்சரியமான திருப்பம்.. அதுவரை வலதுசாரிநிதி இடதுசாரிநிதி என்றிருந்த பிரிவினை மறைந்தது. வலதுசாரி ஏகாதிபத்தியத் தரப்பு இடதுசாரித்திட்டங்களும் இடதுசாரி கோஷங்களும் கொண்ட அமைப்புகளை உருவாக்கி அவர்களுக்கு நிதி வழங்கியது. அந்த அமைப்புகளுக்கு இடதுசாரிகள் சாரிசாரியாகச் சென்றார்கள். ‘இடதுமுகம் கொண்ட ஏகாதிபத்தியக் கருவிகள்’ என இந்தத் தன்னார்வக்குழுக்களைச் சொல்லலாம்.

இந்தத் தன்னார்வக்குழுக்கள் எல்லா தளங்களிலும் இலக்கியம் மற்றும் அரசியல் சிந்தனைச்சூழல்களில் செல்வாக்கைச் செலுத்தின. பல கருத்தரங்குகள் அவற்றின் ஆதரவில் நடத்தப்பட்டன. அவ்வாறு அவை ஒருங்கிணைத்த அரங்குகளில் பேசப்பட்ட

விஷயங்கள் சில மாதங்களிலேயே சிற்றிதழ்களில் பேசுபொருட்களாக ஆனதை எவரும் சிற்றிதழ்களின் உள்ளடக்கத்தில் காணலாம். இவை எதுவும் ரகசியங்கள் அல்ல.

இவற்றின் இரட்டைநிலைபாட்டை நம்மால் இன்று தெளிவாகப் புரிந்துகொள்வது கடினம். எண்பதுகள் வரை அமெரிக்கநிதி பல்வேறு கல்வி-பண்பாட்டு அமைப்புகள் மூலம் இந்தியாவுக்கு வரும்போது அது இந்துத்துவ அமைப்புகளுக்கு சாதகமானதாக இருந்தது. அதே அமெரிக்க நிதி அன்று WACC போன்ற கிறித்தவ அமைப்புகள் மூலம் வடகிழக்குக்கு வந்துசேரும்போது இந்தியதேசியத்துக்கு எதிரான போராட்டங்களை உருவாக்கியது. ஆனால் இடதுசாரி நிதி என்பது முழுக்கமுழுக்க இந்தியதேசிய ஒற்றுமைக்குச் சாதகமானதாகவே இருந்தது. ஏனென்றால் சோவியத் ருஷ்யா இந்தியா சிதிலமாவதை விரும்பவில்லை.

ஆனால் கெடுபிடிப்போர் முடிந்தபின் இடதும் வலதும் ஒன்றாயின. இடதுசாரிகள் ஏகாதிபத்தியத்தின் ஆயுதங்களான தன்னார்வக்குழுக்களுடனும் பல்வேறு கிறித்தவ மதமாற்ற நிதியமைப்புகளுடனும் சேர்ந்து செயல்படுவது பரவலாக ஆகியது. அந்த அமைப்புகள் அதற்கான வெளிமுகத்தை உருவாக்கிக்கொண்டன.

இந்த அமைப்புகள் நேரடியாகவே இந்திய அரசியல்சிந்தனைகளை வடிவமைக்க ஆரம்பித்த காலம் இதுதான். ஏகாதிபத்தியம் அதுவரை வடகிழக்கில் மட்டும் கடைப்பிடித்த கொள்கைகளை தெற்கிலும் ஆரம்பித்தது. இந்திய தேசியத்துக்கு எதிரான திரிபுகளும் அவதூறுகளும் வெறுப்புகளும் ஆய்வுகள் என்ற பேரில் ஊக்குவிக்கப்பட்டன. அந்த ஆய்வுநூல்கள் அவர்களால் இந்தியாவின் குரல்களாக உலகமெங்கும் கொண்டுசெல்லப்பட்டன. அந்த நூல்கள் அதன்பின் இங்குள்ள செய்தி ஊடகங்களில் மேற்கோள்களாகத் திரும்பிவந்தன. அவை நம் நாளிதழ்களையும் சிற்றிதழ்களையும் நிரப்பின.

இந்திய எதிர்ப்புப் பிரச்சாரம் இன்று இந்திய ஊடகங்களில் ஒரு முக்கியமான ‘அஜெண்டா’வாக விளங்குகிறது. இந்திய அரசாங்கத்தின் அடக்குமுறைக்கு எதிராக, இந்திய முதலாளிவர்க்கத்தின் ஆதிக்கத்துக்கு எதிராக இப்பிரச்சாரங்கள் செய்யப்பட்டால் அதை இடதுசாரி நோக்கு என்று புரிந்துகொள்ளலாம். அது என்றும் இருந்தது.

மாறாக இவை இந்தியாவை ஒருங்கிணைத்துள்ள அடிப்படை தேசிய விழுமியங்களுக்கு எதிரான அவதூறுகளாகவும் திரிபுகளாகவும் இருந்தன. இந்திய தேசியம் என்பது

இந்துதேசியம் மட்டுமே, அதில் பிற சிறுபான்மையினர் எல்லாருமே அன்னியர்கள், அடக்கப்படுபவர்கள் என்பது இவர்களின் தரப்பு. இந்துமதம் என்பது பிராமண, உயர்சாதியினரின் மதநம்பிக்கை மட்டுமே, பிற அத்தனைபேரும் இந்துமதத்தால் ஆக்ரமிக்கப்பட்டவர்கள், அடிமைப்படுத்தப்பட்டவர்கள் என்பது இரண்டாவது தரப்பு.

ஆக, இந்தியாவின் தேசியம் என்பது ஒரு உயர்சாதிக்குழுவால் செயற்கையாக உருவாக்கப்பட்ட ஆதிக்கமுறை மட்டுமே என்றும் இந்தியாவின் பெரும்பான்மையினரான மக்கள் அதை எதிர்த்துப் போராடவேண்டும் என்றும் தொண்ணூறுகளுக்குப்பின் உருவாகி வந்த இந்தப் புதிய கருத்தியல்தரப்பினர் அறைகூவுகிறார்கள். இந்துமதமே இந்தியா, ஆகவே இந்துமதமும் இந்தியாவும் அழிக்கப்படவேண்டியவை என்கிறார்கள். ‘இந்து இந்தி இந்தியா’ என்ற நூல் வழியாக எஸ்.வி.ராஜதுரை இந்த வெறுப்புக்குரலை, பிரிவினைக்குரலை தமிழகத்தில் கோட்பாடாக முன்வைத்தார். இன்று பல்வேறு வாய்கள் வழியாக ஒலிப்பது இந்த முன்னோடிக்குரல்தான்.

முழுக்கமுழுக்க மதமாற்ற நோக்கம் கொண்ட நிதியமைப்புகளின் தரப்பு இது. அவர்கள் உருவாக்க விரும்பும் நம்பிக்கையே இதுதான். இந்திய தேசியமும் இந்துமதமும் தங்களுக்கு எதிரானவை என்ற வெறுப்பை அடித்தள மக்களிடையே உருவாக்குவது. அக்குரல்களை முன்வைத்தவர்கள் அன்றுவரை தமிழகத்துக்குள் செயல்பட்ட சிறிய குரல்களாகவே இருந்தார்கள். நிதியமைப்புகள் அவர்களை உலகமெங்கும் கொண்டுசென்றன.இந்திய அரசியலில் பிற்படுத்தப்பட்டோர் பெரும் சக்தியாக எழுந்த காலகட்டத்தில் இந்தத் திரிபு நிகழ்த்தப்பட்டது என்ற யதார்த்தம் இவர்களின் பிரச்சாரத்துக்குத் தடையாக அமையவில்லை.

இந்துமதம் இந்து தேசியத்துக்கு எதிரான குரலுக்கு இந்திய சிந்தனையில் இடமில்லையா என்ன? கண்டிப்பாக உண்டு. நான் இந்துமதத்துக்கு எதிரான அயோத்திதாசரின் தாக்குதல்களை மிகமுக்கியமான கருத்துத்தரப்பாகவே காண்கிறேன். அத்தகைய மாற்றுக்குரல்கள் வழியாகவே ஒரு தேசியம் தன்னை சமநிலையில் வைத்துக்கொள்ளமுடியும். மாற்றிக்கொள்ளமுடியும். இந்தியா எல்லா மாற்றுக்குரல்களுக்கும் இடமளிக்கும் ஒரு விவாதவெளியாகவே இருக்கவேண்டும்.

அந்த மாற்றுக்குரல் உண்மையான தரவுகளின் அடிப்படையில் இருக்கவேண்டும். உண்மையான கொள்கையிலிருந்து பிறக்கவேண்டும். அந்த மாற்றுக்குரல்களுக்குப்

பின்னால் ஏகாதிபத்தியத்தின் நோக்கங்கள் இருக்குமென்றால் அது மிக மிக கவனத்துக்குரியது. அந்நூல்களை அந்த ஏகாதிபத்திய நிறுவனங்களின் பின்னணியையும் கருத்தில்கொண்டே அணுகவேண்டும். நான் சொல்ல விரும்புவது அதை மட்டுமே.

இக்காலகட்டத்தில் தமிழகத்தின் இடதுசாரிக் குழுக்களிடையே உள்மோதல்கள் வலுத்தன. இந்த உள் மோதல்கள் மேற்குறிப்பிட்ட தன்னார்வக்குழுக்களின் செல்வாக்கால் திட்டமிட்டு உருவாக்கப்பட்டவை என அவர்கள் இதழ்களிலேயெ சொல்லப்பட்டுள்ளது. அவர்களில் ஒருசாரார் தமிழ்த்தேசியம் நோக்கி நகர்ந்தனர். இந்தச் சிக்கல்களில் இடதுசாரிக்குழுக்களில் இருந்து விலகியவர்களை இந்தத் தன்னார்வக்குழுக்கள் உள்ளே இழுத்துக்கொண்டன. ஆகவே தன்னார்வக்குழுக்களைப்பற்றி இடதுசாரி இதழ்கள் கடுமையாக எதிர்வினையாற்றின.

இன்னொருபக்கம் ஃபோர்டு ஃபவுண்டேஷன் போன்ற அமைப்புகளின் செயல்பாடுகள். அவற்றையும் ஒற்றைப்படையாகச் சொல்வது கடினம். இந்திய அரசின் ஆதரவுடன் வெளிப்படையாகவே ஃபோர்டு ஃபவுண்டேஷன் இங்கே கலாச்சாரப்பணிகளில் ஈடுபட்டது. பல பணிகள் மதிக்கத்தக்கவை, முக்கியமானவை. குறிப்பாக நாட்டாரியல் போன்ற தளங்களில் அவர்கள் தகவல்சேகரிப்பு, நாட்டார் கலைகள் மீட்பு போன்ற பணிகளையே செய்கிறார்கள். உதாரணமாக, ஃபோர்டு ஃபவுண்டேஷன் இல்லாவிட்டால் ந.முத்துசாமி செயல்பட்டிருக்கமுடியாது. தெருகூத்துக்கு அவர் புத்துயிரளித்தார் என்பதை நாம் மறுக்கமுடியாது.

ஆனால் அதே ஃபோர்டு ஃபவுண்டேஷனின் நிதியால்தான் பாளையங்கோட்டை புனித சவேரியார் கல்லூரியின் நாட்டாரியல்துறை சனங்களின் சாமிகள் போன்ற கருத்தரங்குகளை பெரும் செலவில் நடத்தியது. இந்து மதத்தில் இருந்து பல்லாயிரம் வருடங்களாக பிரிக்கமுடியாமலிருந்துவரும் சிறுதெய்வங்கள் அனைத்தும் இந்துமதத்துக்கு வெளியே உள்ளவை, அவை இந்துமேலாதிக்கத்தால் அடிமைப்படுத்தப்பட்டவை என்ற கருத்தை இடதுசாரிகள் மனதில் திட்டவட்டமாக விதைத்தது. அந்தத் தெய்வங்களை வழிபடுபவர்கள் எவரும் இந்துக்களல்ல என்ற பெரும்பிரச்சாரத்தை முன்னெடுத்தது.

ஆரம்பத்தில் கல்வியாளர்களாலும் சிற்றிதழாளார்களாலும் ஆய்வரங்குகளில் கூறப்பட்ட இந்தக்கருத்து எளிய வடிவில் அடுத்து மதப்பிரச்சாரகர்களுக்குச் சென்று சேர்ந்தது. மோகன் சி லாஸரஸ் அல்லது சாது அப்பாத்துரை உரைகளில் இன்று அது பேசப்படுகிறது.

மதமாற்றத்துக்கான இரைகளாக உள்ள அடித்தள மக்கள் மீதான உளவியல்தாக்குதலின் ஆயுதமாக அது உள்ளது.

ஃபோர்டு ஃபவுண்டேஷன் வடகிழக்குப்பகுதிகளில் இந்திய எதிர்ப்பரசியலின் அடித்தளங்களை உருவாக்கியது. அங்கே பழங்குடிப்பண்பாடுகள் நாட்டார் பண்பாடுகளை ஆராயும் பாவனையில் அவர்களிடம் அவர்களைப்பற்றிய திரிபுபட்ட சித்திரங்களை உருவாக்கினார்கள் என்று சொல்லப்படுகிறது. உலகின் பலநாடுகளில் அவர்கள் பெரும் பண்பாட்டுத்திரிபு வேலைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பது இன்று பொதுவாகவே கருதப்படுகிறது.

தொண்ணூறுகள் வரை ஃபோர்டுஃபவுண்டேஷன் என்பது பொதுவாக கம்யூனிச எதிர்ப்பையே தன் முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தது. இன்று அதன் செயல்கள் மிகச்சிக்கலான ஒரு வலைப்பின்னலாக உள்ளன. அதன் ஒட்டுமொத்த எதிர்மறைப்பங்களிப்பைப் பற்றி குற்றம்சாட்டப்பட்டால் உடனே அதன் நல்ல பங்களிப்புகள் பதிலாகச் சுட்டப்படும்.

ஆனால் பொதுவாகத் துறைசார்ந்தவர்கள் ஃபோர்ட் ஃபவுண்டேஷனை எப்போதும் ஐயத்துடன் பார்ப்பதை கவனித்திருக்கிறேன். அதிலும் சென்ற ஐந்தாண்டு காலமாகவே ஃபோர்டு ஃபவுண்டேஷனைப்பற்றிய ஆழமான விமர்சனங்கள் கண்ணுக்குப்படுகின்றன.அதன் பண்பாட்டு நடவடிக்கைகளில் சாதாரணமாகப் பங்களிப்பாற்றும் சேவையாளர்களுக்கும் கலைஞர்களுக்கும் கலையார்வலர்களுக்கும் அந்தப் பின்னணியே புரியாமலிருக்கலாம்.

இந்த நிதியுதவிகளை ஐந்தாம்படைகள் மட்டுமே பெறுகின்றன என்று நான் சொல்லவரவில்லை. இதெல்லாம் எந்த அடிப்படையில் கொடுக்கப்படுகின்றன, இவற்றுக்குப் பிரதியுபகாரமாக என்ன செய்யப்படுகிறது, இவை ஏன் இத்தனை பூடகமாக கொடுக்கப்படுகின்றன, இந்தத் தொடர்புவலை எப்படிச் செயல்படுகிறது என்பதை நாம் கவனிக்கவேண்டும் என்று மட்டுமே சொல்கிறேன். ஃபோர்டு ஃபவுண்டேஷன் அமெரிக்காவில் மிக முக்கியமான ஒரு நலம்நாடும் நிறுவனம் என்கிறார்கள். அது பிறநாடுகளில் செய்யும் செயல்களுக்கு வேறு பின்னணி உண்டா?

உதாரணமாக, காலச்சுவடு நிறுவனம் புதுமைப்பித்தன் ஆவணக்காப்பகத்தை ஓர் அன்னிய பண்பாட்டு நிறுவனத்தின் நிதியுதவியுடன் ஆரம்பித்தது. ஆனால்

*அந்நிறுவனத்தின் பின்னணி ஃபோர்டு ஃபவுண்டேஷன் என்னும்போது காலச்சுவடு எடுக்கும் இந்திய எதிர்ப்பரசியல் நிலைபாடுகளை அதையும் கணக்கில்கொண்டே யோசிக்கவேண்டும், நான் சொல்ல வருவது அதைப்பற்றி மட்டுமே.*

*நிதியுதவிகளின் பின்னணி வெளிப்படையாக பேசப்படவேண்டும். நிதியுதவிகளையும் கணக்கில்கொண்டே அவை உருவாக்கும் கருத்துக்களை விவாதிக்கவேண்டும்.*

*

*நான் இந்த நிதிப்பின்னணியை இந்த விஷயத்தை கவனப்படுத்த மட்டுமே சொல்கிறேன். இங்கே கருத்துக்கள் உருவாவதன் பின்னணியைப் பார்க்காமல் விவாதிப்பதில் பொருளில்லை என்பதையும் கண்ணுக்குத்தெரியாத ஒரு பெரும் சக்தி இந்த கருத்தியல் விவாதங்களுக்குள் காய்நகர்த்துகிறது என்பதையும்தான். இப்போது மிகமிகக் குறைவான தகவல்களுடன் வெற்று ஊகங்களுடன் இதை நான் சொல்லலாம். ஆனால் இந்தக் கவனம் வரும்காலங்களில் அதிகரிக்கும். இன்னும் அதிக தகவல்கள் வெளிவரும். என்னுடையது ஒரு முன்னோடிக்குரல்.*

*இந்தக்குரல் எதிர்கொள்ளப்பட்ட விதம் நான் எதிர்பார்த்தது போலத்தான். நான் தமிழில் கருத்துருவாக்கத்தின் பின்னணியில் நிதியுதவிகள் உள்ளன\ என்று வெளிப்படையாக ஏற்கனவே பேசப்பட்ட தகவலைச் சொல்லி கருத்துக்களுடன் சேர்த்து அதைப் பற்றி யோசிக்கவேண்டும் என்கிறேன். நான் அப்படி ஊகிப்பதற்கான முதற்கட்ட ஆதாரத்தையும் அவ்வமைப்புகளையும் சுட்டிக்காட்டுகிறேன். அந்தக்குற்றச்சாட்டை எனக்கு முன்னால் முப்பதாண்டுகளாகவே எப்படி இடதுசாரிகளே சொல்லிவந்திருக்கிறார்கள் என்கிறேன். அப்போதுகூட இந்தத் தெளிவற்ற ஆதாரமென்பது ஒரு ஊகத்துக்கான முகாந்திரமே என்றும், இந்த விஷயத்தில் இப்போது உறுதியான ஆதாரங்கள் முன்வைக்கப்படமுடியாதென்றும் சொல்கிறேன்.*

*அதற்குப்பதிலாக என்னிடம் உறுதியான ஆதாரங்களையே கேட்கிறார்கள். எப்படிப்பட்ட ஆதாரங்கள்? நிதி பெற்றமைக்கு ஆவணச்சான்றுகள். அப்படி ஆவணச்சான்று கிடைத்தால்கூடப் போதாது, இந்த நிதியினால்தான் இந்தக் கருத்து எழுதப்பட்டது என்று புறவயமாக நிரூபிக்கவும் வேண்டும். இல்லையேல் அது அவதூறு!*

*நான் முன்வைத்த மையமான விஷயத்தை அப்படியே தாண்டிச்சென்று ஏன் முதலில் நினைவுப்பிழையாகச் சொன்னாய் என்கிறார்கள். நீ மட்டும் அரசாங்க ஊதியம் பெறவில்லையா என்கிறார்கள். ஃபோர்டு ஃபவுண்டேஷன் நல்ல விஷயங்களைச் செய்திருக்கிறதே என்கிறார்கள். ஃபோர்டு ஃபவுண்டேஷன் நிதி பெற்ற அத்தனைபேரையும் தனித்தனியாக கட்டுரை எழுதி கண்டித்துவிட்டு பேசு என்கிறார்கள். மொத்தத்தில் பிற பிரச்சினைகளில் ஆழ ஆழச்சென்று வேரைத் தேடுபவர்கள் இதில் மட்டும் வைக்கோல் போர்களை மேலே மேலே அள்ளிப்போட்டு மூட முயல்கிறார்கள்.*

*கட்டக்கடைசியாக எனக்குச் சொல்லப்படும் பதில் 1992-இல் எனக்கு அளிக்கப்பட்ட கதா விருது தந்த அமைப்பு ஃபோர்ட் ஃபவுண்டேஷனின் நிதியை எப்போதோ பெற்றிருக்கிறது என்பது மட்டுமே. கதா விருது மத்திய அரசு உயரதிகாரியாக இருந்த தர்மராஜன் அவர்களின் மனைவி கீதா தர்மராஜனின் அமைப்பு. மத்திய அரசின் சில சமூகநலத்துறை நிதிகளால் அமைக்கப்பட்டது. அந்த விருது இந்தியாவின் பதினெட்டு மொழிகளிலும் உள்ள எழுத்தாளர்களுக்கு ஐந்தாறுவருடம் வழங்கப்பட்டது.*

*முதல்விருது சுந்தர ராமசாமிக்கு. அடுத்தவிருது எனக்கு. என்னுடன் எம்.டி.வாசுதேவன் நாயர் உட்பட பல 'முற்போக்கு'க் கலைஞர்களும் பரிசுபெற்றனர். விருதுடன் ரூ 2000 அளிக்கப்பட்டது. போக்குவரத்துச்செலவு இந்திய ரயில்வே இலவசமாக அளிக்க தமிழ்நாடு அரசு மாளிகை தங்கும் வசதி அளிக்க இந்திய ஜனாதிபதியால் அவ்விருது வழங்கப்பட்டது. ஏதோ ஒரு திட்டத்துக்காக ஃபோர்டு ஃபவுண்டேஷனின் நிதியுதவியை கதா பெற்றிருப்பது இருபது வருடம் கழித்து இன்று தெரியவருவதனால் நானும் ஃபோர்டு ஃபவுண்டேஷனின் உள்ளூர் முகவர்களும் நிகரானவர்கள் என்று ஒருவர் சொல்வாரென்றால், மாபெரும் மதமாற்ற தன்னார்வக்குழுக்களின் நிதி பெறுவதை அதைக்கொண்டு நியாயப்படுத்துவாரென்றால், அது மட்டுமே அவர்களின் தரப்பு பதில் என்றால் என்ன சொல்ல?*

*ஒருவர் அவர் தொடர்புகொள்ளும் ஓர் அமைப்பு, அல்லது மனிதர் ஃபோர்டு ஃபவுண்டேஷனுடைய அல்லது வேறு தன்னார்வக் குழுக்களுடைய ஆதரவைப் பெற்றிருக்கிறார் என்பதை எப்படி அறியமுடியும்? ஒரு கட்டத்தில் அறிந்தபின் என்ன செய்யமுடியும்? ஆச்சரியப்படலாம். வருத்தப்படலாம். ஃபோர்டு ஃபௌண்டேஷன் ஆதரவில் எம்.டி.முத்துக்குமாரசாமி நடத்திய நாட்டார்கலைகள் பற்றிய ஒரு திருவிழாவில்கூட நான் சிறப்புவிருந்தினராகக் கலந்துகொண்டிருக்கிறேன் – சொந்தச்செலவில். அவர் மீதான நம்பிக்கையும் அந்தப்பணி மீதான ஈடுபாடுமே காரணம்.*

*அவ்வமைப்பின் பின்னணி பின்னர் தெரியவந்தால் என்ன செய்யமுடியும்? அந்த நிகழ்ச்சியில் நான் கலந்துகொண்டதனால் நானும் ஃபோர்டு ஃபவுண்டேஷனின் ஆதரவாளர் என்றா அர்த்தம்?*

*ஆனால் சொந்தச்செலவில் நாட்டார்கலைகளை மீட்கப்போராடும் ஹரிகிருஷ்ணன் தான் எனக்கு முக்கியமானவர். அவருக்கே நான் என்றும் என்னுடைய அதிக கவனத்தைக்கொடுப்பேன். எம்.டி.எம்மின் கருத்துக்களை நான் இப்போதும் கவனிப்பேன், ஆராய்வேன். கொஞ்சம் எச்சரிக்கையுடன். அவ்வளவுதான்.*

*அப்படி ஓர் 'உதவிபெற்ற' ஒரு அமைப்புடன் ஒருவர் தொடர்பு கொள்வதும், அந்த அமைப்பு மனிதர்கள் நேரடியாக பிராஜக்ட் சமர்ப்பித்து அலைந்துதிரிந்து நிதிபெற்று அதன் விதிகளுக்குட்பட்டு 'ஆராய்ச்சி' செய்வதும் சமம்தான் என வாதிடும் புத்திசாலித்தனங்கள் ஒருபோதும் வாசகனின் மனதுக்குள் செல்லாது. முன்னரே ஒரு தரப்பை எடுத்துக்கொண்டவர்களுக்கு மட்டுமே சால்ஜாப்புகளுக்குப் பயன்படும்.*

*என்னதான் ஆதாரத்துடன் எவ்வளவுதான் முக்கியமான விஷயங்களைச் சொன்னாலும் தங்கள் நிலைபாடுகளில் உறுதியாக இருப்பவர்கள் அதை கவனிக்கப்போவதில்லை. தங்கள் சொந்த காழ்ப்புகள் மற்றும் கருத்துக்களுடன் வேண்டியவர்களை காக்கவும் வேண்டாதவர்களை வசைபாடவும் மட்டுமே முயல்வார்கள். இவர்கள் எவருக்கும் இதில் ஏதாவது உண்மை இருக்குமா என்றே தோன்றவில்லை. உண்மையாக இருந்தால் என்னாகும் என மனம் பதைக்கவில்லை.*

*மாறாக என்னை என் சொற்களைக்கொண்டு எப்படி மடக்குவது, என்ன எதிர்வாதங்களை கண்டுபிடிப்பது, எதை எதனுடன் முடிச்சுப்போடுவது என்ற பதற்றம் மட்டுமே இருக்கிறது. வாதிட்டு சமாளிக்கும் முனைப்பு மட்டுமே வெளிப்படுகிறது. இதுவே இவர்கள் யாரெனக் காட்டுகிறது. இவர்களுக்காக அல்ல, இதை பொதுவாசகர்களுக்காக எழுதியிருக்கிறேன்.*

***இந்தத் திரிபுவாதம் அல்லாமல் இந்த அடிப்படையான வினாவுக்கு மனசாட்சியின் குரலில் அமைந்த ஒரேயொரு பதில்கூட எழவில்லை என்பதே நான் சொன்னவற்றில் உள்ள உண்மைக்கான சான்று.***

இது ஒரு அபாயகரமான புள்ளி. இதைத் தொட்டுவிட்டேன் என்பதனால் நான் அவதூறுகளை திரிப்புகளை தொடர்ந்து சந்திக்கவேண்டியிருக்கும். வசைகளையும் நக்கல்களையும் கேட்கவேண்டியிருக்கும். அது இன்னும் கொஞ்சநாள் இணையத்திலும் சிற்றிதழ்களிலும் நிகழும். நடக்கட்டும். அது தெரிந்தே இதில் இறங்கினேன்.

சரிதான், என்னைப்பற்றி இனி என்ன புதியதாகச் சொல்லமுடியும்? வலதுசாரி, இந்துத்துவ, தேசியவெறிகொண்ட, பிற்போக்கான,சாதியவாதியான, மனக்கோளாறுகொண்ட, தனிமனித அறமே இல்லாத, காப்பியடித்து கதைகளை எழுதக்கூடிய, ஆணவமும் தன்முனைப்பும் கொண்ட, விவாதங்கள்மூலமே நிலைநிற்கக்கூடிய, பொய்களை மட்டுமே சொல்லக்கூடிய, சுயமோகம் கொண்ட, தமிழ்விரோதி –அவ்வளவுதானே, அப்படியே வைத்துக்கொண்டு இந்த விஷயத்தை மேலே பேசுவோம்.

இப்போதைக்கு நிறுத்திக்கொள்கிறேன். நான் முன்வைத்த இந்தப்பிரச்சினை மட்டும் முச்சந்தியில் ஒரு பாறாங்கல் மாதிரி கிடக்கும். அது கேள்விகளை உருவாக்கிக்கொண்டே இருக்கும்.

ஜெ

## *5) 'நிதிப்பிள்ளை'களைப் பற்றி...*

*சில ஆண்டுகளுக்கு முன் ஆய்வுலகின் அன்னியக்கரங்கள் என்று நான் கலாச்சாரச் செயல்பாடுகளிலும் சிலவகைச் சேவைகளிலும் ஊடாடி பெரும் செல்வாக்கைச் செலுத்தும் அன்னிய நிதிபற்றி சில கருத்துக்களைச் சொல்லியிருந்தேன். அன்று பெரும்பாலும் ஒருவகை வம்புகளாக மட்டுமே காணப்பட்ட அவை இன்று பரவலாக பேசப்படுகின்றன. சற்றுப்பிந்தியேனும் நான் சொன்னவற்றுக்கு ஒரு மதிப்பு வந்திருப்பதை உணர்ந்து மகிழ்ச்சி*

*

*தொண்ணூறுகளின் தொடக்கத்தில்தான் எனக்கு இந்த நிதிவலை பற்றிய தகவல்கள் தெரியவந்தன. அன்று நான் அதிதீவிரமாக பங்கெடுத்த பல சூழியல் அமைப்புகள் அன்னிய நிதி பெற்றவை என்பது அவற்றுக்குள் நிகழ்ந்த சண்டைகள் வழியாகத் தெரியவந்தமை எனக்கு பெரிய அதிர்ச்சியை அளித்தது. அவற்றில் பல அமைப்புக்கள் காந்தியம் பேசியவை. சில அமைப்புக்கள் இடதுசாரி அரசியல் பேசியவை. இரண்டு தரப்பும் மாறி மாறி சண்டையிட்டனர். ஒரே இடத்தில் நிதி பெற்றிருந்தனர்.*

*ஒரு கட்டத்தில் என்னிடமே ஒருவர் நிதிபெறும் ஓர் அமைப்பை சேர்ந்து நிறுவுவதற்கு ஆலோசனை கேட்டார். அன்று நான் சொற்ப சம்பளம் பெறும் ஊழியன். ஆனால் அது எனக்கு அருவருப்பை ஊட்டியது. விலகிக்கொண்டேன். ஆனால் என்னவோ நிகழ்கிறது என்று மட்டும் தெரிந்தது. பின்னர் பஞ்சாப், வடகிழக்கு பிரச்சினைகளைப் பற்றி ஆராய்ந்தபோதுதான் இந்த நிதிவலையின் அரசியல் புலம் பிடிகிடைத்தது. கடைசியாக சில உளவுத்துறை உயரதிகாரிகள் தெளிவு அளித்தனர்.*

*

*நிதிபெற்றவர்கள், பெறச்சூழ்பவர்கள், பெற்றவர்களை அண்டியவர்கள் என ஒரு பெரும்கூட்டம் நம்மிடையே உள்ளது. இவர்களில் கணிசமானவர்கள் இங்கே முற்போக்கு பாவனைகளுடன் அறிவுஜீவிகளாக ஊடகங்களை நிறைத்திருக்கிறார்கள். இவர்களுக்கு பெரும் ஊடகங்களில் வலுவான ஊடகநண்பர்கள்*

இருக்கிறார்கள்.சர்வதேசக் கலாச்சார அமைப்புகளின் பெரும்பின்புலம் உள்ளது. உள்ளூரில் செயல்படும் தன்னார்வக்குழுக்களின் ஆதரவுப்புலம் உள்ளது.

இவர்கள் நிதிகளை வாங்கித்தர முடியும். சர்வதேசக்கருத்தங்க அழைப்புகளை ஏற்பாடு செய்ய முடியும்.நூல்களுக்கு மொழிபெயர்ப்புகளை உருவாக்கி சர்வதேச அளவில் கொண்டுசெல்லமுடியும். எவரையும் எந்த எல்லைவரைக்கும் கொண்டு செல்லும் ஆற்றலும் இவர்களுக்கு உண்டு. இன்றைய இந்தியாவின் இலக்கியக் -கலாச்சார- சிந்தனைத்தளத்தின் உண்மையான மைய சக்தி இவர்களே

ஒருவரை ஒருவர் மறுத்தும் வாதிட்டும் இவர்கள் பண்பாட்டுச்சூழலை நிறைத்திருந்தாலும் நிதி என்று சுட்டப்படும்போது ஒற்றைக்குரலில் திரண்டு எழுவதைக் காணலாம். இந்த பெரும் சக்திக்கு எதிராக எந்த எழுத்தாளரும் இங்கே எதிர்த்து நிற்கமுடியாது. ஊடக அவதூறுகள் முதல் கருத்தியல்தளத்தின் சூழ்ந்துதாக்கும் உத்திகள் வரை பெரும் எதிர்ப்பைச் சந்திக்கவேண்டியிருக்கும். ஆகவே இதைப்பற்றி தெரிந்தும் பெரும்பாலான எழுத்தாளர்கள் அமைதிகாப்பதே வழக்கம்

நான் ஒருவகை தற்கொலைத்தன்மையுடன் இவ்வகை விஷயங்களில் கருத்துச்சொல்லவேண்டும் என எனக்கே விதித்துக்கொண்டவன். அது நான் பி.கே.பாலகிருஷ்ணனிடமிருந்து கற்றுக்கொண்டது. இன்று என் சொற்கள் வழியாக இவை கவனப்படுத்தபட்டமைக்காகவே நான் தாக்கப்படுகிறேன். என்னை ஃபாசிஸ்டு என்றும் மதவெறியன் என்றும் சாதிவெறியன் என்றும் முத்திரையிடும் பெரும் பிரச்சாரப்பணியை நிதியமைப்புகள் தங்கள் கையாட்கள் வழியாக முன்னரே தொடங்கிவிட்டன. கொஞ்சம் கவனமாக இருப்பதனால் பாலியல்குற்றச்சாட்டு மட்டும் இன்னமும் வரவில்லை.

நிதிப்பிள்ளைகள் பல கோணங்களில் சுற்றிச்சுற்றி கம்பு வீசுகிறார்கள். அவர்களின் பதற்றம் புரிந்து கொள்ளத்தக்கதே. அந்த தர்க்கங்களை சுயபாதுகாப்புக்காக உருவாக்கிக்கொண்ட பின்னரே அவர்கள் இதில் இறங்கியிருப்பார்கள்.அவர்களிடம் வெட்டித்தர்க்கம் செய்ய நேரமிருப்பவர்கள் செய்யலாம். ‘நம்ம சைடை எடுத்துப் பேசுறாரே’ என்று ஆதரிப்பவர்கள் ஆதரிக்கலாம். நான் சொல்வது குறைந்தபட்ச தர்க்கசிந்தனையும் நியாயஉணர்வும் கொண்ட எவருக்கும் புரியும் விஷயம் மட்டுமே.

*

*1. அறிவியல் ஆய்வுகளுக்கான நிதிக்கொடைகளையும் இதேபோன்ற பண்பாட்டு ஆராய்ச்சி மற்றும் செயல்பாடுகளுக்கான நிதிக்கொடைகளையும் கலந்துகட்டி மாயம் செய்கிறார்கள் நிதிப்பிள்ளைகள். அறிவியல் ஆய்வுகளில் ஏராளமான புறவயமான அளவுகோல்கள் உள்ளன. அவை நேரடியான அறிவுத்துறைச்செயல்பாடுகள். சர்வதேச ஒத்துழைப்பு இன்றி பலவகை அறிவியலாய்வுகள் சாத்தியமே அல்ல என்பதனால் உலகிலுள்ள பல அறிவியலமைப்புக்கள் நிதிக்கொடைகளை அளித்து ஆய்வுகளை விரிவாக்கம் செய்கின்றன*

*பண்பாட்டு ஆய்வுகளுக்கு அப்படிப்பட்ட புறவயத்தன்மை இல்லை. ஓரளவு இருந்தாலும் இங்கிருக்கும் சூழலில் அப்படி ஏதும் சுத்தமாகவே இல்லை என்பது இவற்றில் குரலெழுப்புவர்களின் தகுதியை நோக்கினாலே தெரியும். இப்பண்பாட்டு ஆய்வுகளும் நடவடிக்கைகளும் நேரடியாகவே அரசியல் செயல்பாடுகளுடன் பிணைந்தவை. இதை புரிந்துகொள்ள பொதுத்தர்க்கமே போதும்*

*2. 'நிதியுதவி நிறுவனம்' என்ற பொதுச்சொல்லைப் பயன்படுத்தி இந்த நிதிப்பிள்ளைகள் கார்ப்பரேட் நிதியையும் அன்னிய நிதியையும் தந்திரமாக குழப்பியடிப்பதைக் காணலாம். இரண்டும் வேறுவேறு. கார்ப்பரேட்நிதி இந்தியத் தொழில்நிறுவனங்களுடையது என்றால் அது வேறு விஷயம். அதிகபட்சம் அவர்களின் தொழில்சார்ந்த சில முன் எதிர்பார்ப்புகளும் திட்டங்களும் அவர்களுக்கு இருக்கலாம். டாட்டாவுக்கு இருப்பது போல*

*இங்குள்ள கார்ப்பரேட் அமைப்புக்கள் பலவகையான சட்ட நிர்ப்பந்தங்களுக்காக நிதியுதவி செய்யலாம். விளம்பரத்துக்காகச் செய்யலாம். உண்மையான அறநோக்குடனும் செயல்படலாம். வெளிப்படையாக அவற்றைப்பெற்று பணியாற்றுவது பெரும் பிழை அல்ல. காந்தியே பிர்லா-டாட்டாவிடம் நிதி பெற்றவர்தான். அந்த நிதியை அவர்கள் பெற்றதும் செலவிட்டதும் வெளிப்படையாகத் தெரியவரும் என்றால் அதையும் கருத்தில்கொண்டபடி அவர்களின் செயலை நாம் மதிப்பிடலாம்*

*3. ஆனால் அமெரிக்க- ஐரோப்பிய பின்புலம் கொண்ட நிதியுதவி அமைப்புக்கள் அப்படிப்பட்டவை அல்ல. அவற்றைப்பற்றி நமக்கு ஒன்றுமே தெரியாது. மிகவிரிவான பின்புல ஆராய்ச்சி இல்லாமல் அவற்றைப்பற்றி எதையுமே சொல்லமுடியாது. அப்படிச் சொல்லவேண்டிய ஆவண ஆதாரங்களை அவைதான் அளிக்கவேண்டும்.அவை*

*அளிப்பதில்லை. அதிகபட்சம் நான்காண்டுகளுக்கு மேல் ஆவணங்களை பேணுவதில்லை என அவை அரசுவிசாரணையில் தெரிவிக்கின்றன.*

*உண்மையில் வெளிப்படையானவை, ஆதாரபூர்வமானவை என்று அவற்றை ஆதரிப்பவர்கள் சுட்டிக்காட்டும் எல்லா ஆதாரங்களும் அந்த அமைப்புகளே முன்வைக்கும் வெற்றுவரிகள்தான். நாம் சென்று ஆராய்ந்து அறியக்கூடியவை அல்ல. அந்த எளிய தகவல்கள்கூட மிகக்கடுமையான அரசுக் கட்டுபாட்டுக்காக அவை வேறுவழியில்லாமல் வெளிப்படுத்துபவை மட்டுமே. அவை உண்மையில் என்ன ஏது என்றே நம்மால் அறிய முடியாத அமைப்புகள்தான். ஐயமே தேவை இல்லை*

*ஆகவே தன் சிந்தனைகள் மதிப்பு மிக்கவை என நினைக்கும் எவரும் அவற்றை அணுக மாட்டார் என்றே நினைக்கிறேன்.*

*4 எவருக்கு எந்த அடிப்படையில் நிதியளிக்கின்றன, உலக அளவில் என்னென்ன ஒட்டுமொத்தத் திட்டங்களின் அடிப்படையில் நிதியளிக்கின்றன, ஆய்வுத்தரவுகளை எவருக்காக பயன்படுத்துகின்றன என்பதெல்லாம் இந்தியா போன்ற பிற்பட்ட அரசுகளின் உளவுத்துறைகளாலேயே அறியமுடியாதவை. நேற்று கூட இவற்றை ஆராய்ந்த ஓய்வுபெற்ற கேரள உளவுத்துறை அதிகாரியும் எழுத்தாளருமான ஒருவரிடம் பேசிக்கொண்டிருந்தேன். 'அறியவே முடியாது. நாமெல்லாம் சின்னக் கொசுக்கள். அது யானை' என்றார். சும்மா சுற்றிச்சுற்றி ரீங்காரமிட்டு பறப்பது மட்டுமே நம் ரா போன்ற அமைப்புக்கே செய்யக்கூடுவதாக இருக்கிறது.*

*அத்துடன் எங்கு எந்த அதிகாரி அல்லது அரசியல்வாதி மறைமுகமாக நிதிபெற்றிருக்கிறார் என்றே சொல்லமுடியாது. ஆகவே எவரும் துணிந்து கைவைப்பதும் இல்லை. காங்கிரஸ், பாரதியஜனதா என எவரும் இதில் விதிவிலக்கில்லை.*

*மேலும் இந்த அமைப்புக்களால் பேணப்படும் அறிவுஜீவிகள் இந்தியச்சூழலில் பெரும் சக்தி. இங்குள்ள ஒற்றைப்படையாகத் திரட்டப்பட்ட அறிவமைப்பு என்றால் உண்மையில் இவர்கள்தான். இவர்களில் புகழ்பெற்ற இதழாளர்களும் பலர் உண்டு. அத்துமீறினால் எந்த பெரிய அதிகாரியாக இருந்தலும் கதற அடித்துவிடுவார்கள்.அந்தப்பயம் எல்லா அரசியல்வாதிகளுக்கும், அதிகாரிகளுக்கும் உண்டு என்றார் அந்த முன்னாள் அதிகாரி..*

இந்நிலையில் எழுத்தாளர்கள் இவற்றைப்பற்றிய ஐயங்களை மட்டுமே இன்றைய நிலையில் சொல்லமுடியும். இந்த மாபெரும் நிதியமைப்புக்களைப்பற்றி ‘ஆதாரபூர்வமான’ கட்டுரைகளை எழுத எழுத்தாளர்கள் ஜேம்ஸ்பாண்டுகள் அல்ல. ஆகவே இதன் நிதிப்பிள்ளைகள் ‘ஆதாரம் உண்டா?’ என்றுதான் எப்போதும் எம்புவார்கள்.

5 இந்த அன்னிய நிதியமைப்புக்கள் பெரும்பாலும் மிக விரிவான ஏகாதிபத்திய நோக்கம் கொண்டவை என்பதை அவற்றின் செயல்பாடுகளில் இருந்து பலவாறாக ஊகித்து விரிவாகவே எழுதியிருக்கிறார்கள். ஊகிக்கத்தான் முடியும், ஆதாரங்களை அவற்றுக்குள் இருந்து எவரேனும் வெளிப்படுத்தினால்தான் உண்டு. அதுவும் ஓரளவு அவ்வப்போது நடந்திருக்கிறது

ஃபோர்ட் பவுண்டேஷன் ராக்ஃபெல்லர் ஃபவுண்டேஷன் முதலியவை எப்படி எப்படி கீழைநாடுகளின் அரசியல் பண்பாடுகளில் ஏகாதிபத்திய நோக்குடன் சூறையாடல்களை நிகழ்த்தியிருக்கின்றன என்பது அவ்வகையில் பக்கம் பக்கமாக ஆவணப்படுத்தப் பட்டுள்ளது. என் இணையதளத்திலேயே பல கட்டுரைகளுக்கான சுட்டிகள் உள்ளன

6 இவ்வமைப்புக்கள் ‘ரகசிய’ நடவடிக்கைகளை மேற்கொள்ளும் அமைப்புக்கள் அல்ல. இவை செய்யும் செயல்கள் வெளிப்படையானவைதான். பிரச்சினை இவற்றின் முழுவடிவம் நமக்குத்தெரியாது என்பதே. ஆகவே ‘எல்லாம் வெளிப்படையானவை’ என்று பிலாக்காணம் வைப்பதில் பொருளே இல்லை. இவை பெரும்பாலும் அந்தந்த நாடுகளின் பொதுவான சட்டங்களை முழுமையாகவே கடைப்பிடிப்பவை. மிகச்சிறந்த நிபுணர்களைக்கொண்டு அச்சட்டங்களை தேவையானபடி கையாளக்கூடிய அளவில் செயல்பாடுகளை வகுத்துக்கொண்டவை.

7 இவற்றின் செயல்பாடுகள் இருவகை. ஒன்று, நேரடியான நிதிக்கொடைகள். இரண்டு இரண்டாம் கட்ட அமைப்புகளை உருவாக்கி அவற்றுக்கு நிதிக்கொடைகளை அளிப்பது. சிலசமயம் மூன்றாம் கட்ட அமைப்புகளையே உருவாக்கும்.

சென்ற காலங்களில் வடகிழக்கு மாகாணங்களில் இந்த நிதியமைப்புகள் உருவாக்கிய ‘பண்பாட்டுச் செயல்பாடுகள்’ மூலம் உருவான சமூகப் பேரழிவை உணர்ந்தபின்னர் அரசு கண்காணிப்பை செறிவுபடுத்தியது. உடனே இவை இரண்டாம் கட்ட அமைப்புகளை உருவாக்கி அவற்றுக்கு நிதியளிக்கத் தொடங்கின. இந்த இரண்டாம்

*கட்ட அமைப்புக்கள் இந்தியர்களால் இந்தியச் சட்டங்களுக்கு முற்றிலும் உட்பட்ட முறையில் அமைக்கப்பட்டவையாகவே இருக்கும். உள்ளூர் நிதிகளையும் இவை ஓரளவு பெற்றுக்கொள்ளும்.*

*இவற்றின் நிதிவலை மிகச்சிக்கலானது. அதன் மீதான எந்த விமர்சனத்திற்கும் பதிலாக இந்தச் சிக்கலைத்தான் இவர்கள் முன்வைப்பார்கள். இது அந்த நிறுவனமே அல்ல,இது வேறு என்பார்கள். இது முற்றிலும் சட்டபூர்வமானது என்பார்கள். அது இதை எதிர்க்கிறதே என்பார்கள்.*

*8 இந்த பலவகை முகமூடிகள் கொண்டவை. ஓரளவு முக்கியமான ,புகழ்பெற்ற கலைஞர்களுக்கும் சேவையாளர்களுக்கும் இவை நிதிவழங்கியிருக்கும். எப்போதாவது இவற்றின் செயல்பாடுகள் விமர்சிக்கப்படும் என்றால் 'இவர்களுக்கெல்லாம் கொடுக்கப்பட்டதே. சிலர் வேறுமாதிரி இருப்பார்கள். அதை நிதிக்கொடையாளர் எப்படி கட்டுப்படுத்த முடியும்?' என்ற பதில் சொல்லப்படும்*

*9 நிதியமைப்புக்கள் ஆய்வுகளில் எவ்வகையிலும் குறுக்கிடுவதில்லை என்று இந்த நிதிப்பிள்ளைகள் மீளமீளச் சொல்வார்கள். ஆனால் இவர்களின் நிதி பெற்ற அனைத்து ஆய்வுகளிலும் உள்ள பொதுத்தன்மையை எளிதில் உணர முடியும். எந்த காரணமும் இல்லாமல் நிதிகொடுக்க அவர்கள் கருணாமூர்த்திகளான கடவுள்கள் அல்ல என்பதை அறிய புலனாய்வுத்திறன் தேவை இல்லை.*

*ஏகாதிபத்திய நிதி பெற்று புரட்சி செய்கிறோம் என்று சொல்பவர்களும் இங்குண்டு. நிதிகொடுப்பவன் ஏமாளி இவர்கள் மேதைகள் என நம்புபவர்கள் நம்பலாம்.*

*10 இந்தியாவின் பண்பாட்டுத் தளத்தில் இன்றுவரை நிதியின்மையால் மிகப்பெரும்பாலான உண்மையான ஆய்வுகள் முழுமையடையாத நிலையிலேயே உள்ளன. சொல்லப்போனால் இப்போது ஆய்வு என நிகழ்வது மிகமிகச் சொற்பம்.ஆனால் இன்னொருபக்கம் இந்த அன்னியநிதி சில திசைகளில் பீரிட்டுக்கொண்டிருக்கிறது. முதன்மையான ஆய்வாளர்கள் நிதியின்றி இருக்கையில் வேறுசிலர் நிதியில் த்ளைக்கிறார்கள். இதுதான் பிரச்சினை*

*11. உலகின் பலநாடுகள் – குறிப்பாக இடதுசாரி அரசுகள் – போர்டுபவுண்டேஷன் போன்றவற்றை தடைசெய்துள்ளன. இங்குள்ள பல்வேறு வழிகளினூடாக இந்திய அரசு*

*இவர்களை இன்று கட்டுப்படுத்துகிறது. ஆனால் சட்டத்தின் வளைவுகளை மிகத்திறமையாக இவர்களால் கடந்துசெல்ல முடியும்*

*இப்படி சட்டத்தை வளைத்தும் ஊடுருவியும் இவர்கள் செய்யும் பணியின் நோக்கம் இங்கே உண்மையான பண்பாட்டு ஆய்வை ஊக்கப்படுத்துவதும் சிறந்த இலக்கியங்களை உருவாக்குவதும் கலைகளை வளர்ப்பதும் மனிதாபிமான சேவையும் மட்டுமே என உண்மையிலேயே நம்புபவர்கள் தங்களுக்கு 18 வயது தாண்டிவிட்டதா என இன்னொரு முறை உறுதிசெய்துகொள்லலாம்*

*12 இவ்வமைப்புக்களில் உள்ள முக்கியமான 'ரகசிய' அம்சம் இவற்றை அணுகுவதிலுள்ள பாதைதான். சட்டப்படி எல்லாமே வெளிப்படையானவை. விதிகளின்படி எவரும் அணுகி நிதிபெறலாம். ஆனால் நடைமுறையில் ஏற்கனவே இவர்களின் உள்வட்டத்தில் உள்ள சில முக்கியமானவர்களால் பலகட்ட பரிசீலனைக்குப்பின் தனிப்பட்ட முறையில் சிபாரிசு செய்யப்படாமல் எவரும் உள்ளே செல்லமுடியாது. மிக அந்தரங்கமான ஒரு தொடர்புவலை இது. உள்வட்டத்தில் உள்ள ஒருவர் அதற்கு உள்வட்டத்தில் உள்ள ஒருவருக்கு சிபாரிசு செய்வார். அவர் மேலும் உள்ளே உள்ள ஒருவருக்கு. அதன்பின் எங்கோ எவரோ முடிவெடுக்கிறார்*

*இந்தவழியில் சென்று பணம்பெற்ற ஒருவர் என்னிடம் சொன்னார் 'தேவடியா வீட்டுக்கு தெரிஞ்சவன் கூட்டிட்டுப்போறது மாதிரி''*

*13 இவர்கள் அளிக்கும் நேரடிநிதி ஆவணங்களில் சிலசமயம் குறைவானதாகவே படும். ஆனால் கருத்தரங்குகளுக்கான அழைப்பு, நூலை மொழியாக்கம் செய்தல் என அவை அளிக்கும் உதவிகள் பலதரப்பட்டவை*

*

*அடிப்படையில் இவ்வமைப்புக்களின் செயல்பாடுகளை பொதுவாக இப்படித் தொகுக்கலாம். .*

*அ. அவை கீழைநாடுகளின் பண்பாடுகள் பிற்பட்டவை என நிறுவும் நோக்கத்தை மறைமுகமாக நிறைவேற்றும், அதற்கான தரவுகளை உருவாக்கும்*

ஆ. கீழைநாடுகளின் மக்கள்திரள்கள் நடுவே உள்ள சமூகப் பிளவுகள் மற்றும் அவநம்பிக்கைகளைத் தொகுக்கும். அவற்றை ஒரு பெரிய தரவுத்தொகையாக சேகரித்து மூலநிறுவனங்களால் வழிநடத்தப்படும் வேறு நிறுவனங்களுக்கு அளிக்கும். அவை பெரும்பாலும் ஐரோப்பிய ,அமெரிக்க கல்விநிறுவனங்களாகவே இருக்கும்.

இ. கீழைநாடுகளின் ஆவணப்படுத்தப் படாத நாட்டார்,பழங்குடி ஞானத்தை சேகரித்து ஆவணப்படுத்தும். அந்த ஆவணங்கள் ஒருபோதும் இங்குள்ள அரசுக்கோ அரசு நிறுவனங்களுக்கோ அளிக்கப்படாது. எந்த வகையிலும் அவை கீழைநாடுகளுக்குரிய வகையில் காப்புரிமை பெறப்படாது. அந்தத் தரவுகள் பிறருக்கே அளிக்கப்படும்

ஈ இங்குள்ள தன்னார்வக்குழுக்களின் அரசியலுடன் கச்சிதமாக அவை இணைந்து செயல்படும்

உ இந்தக்காரணத்தால்தான் நாட்டாரியல், மானுடவியல், சமூகவியல் ஆய்வுகளுக்கு நிதியளிக்கப்படுகிறது. நாட்டார்தன்மை கொண்ட இலக்கியம் மற்றும் நாட்டார் கலைகளுக்கு நிதியளிக்கப்படுகிறது.

*

ஃபோர்டு பவுண்டேசன் நிதி பெற்று வடகிழக்கில் அரிய மருத்துவ- கல்விச்சேவை செய்த இரு பாதிரிமார்களை எனக்குத்தெரியும். நித்யாவுடன் நெருக்கமானவர்கள். ஒருகட்டத்தில் அவர்களுக்குத்தெரிந்தது அவர்கள் வழியாக அங்கே அந்த அமைப்புக்கள் வேரூன்றின என்று. அவை இனக்குழுக் காழ்ப்புகளை ஆராய்ந்தன.. அந்த தகவல்களின் அடிப்படையில் அங்கே மெல்லமெல்ல தீவிரவாதம் உருவாக்கப்பட்டது. பல்லாயிரம் பேர் இனக்குழு மோதல்களில் செத்தன்ர். ஒட்டுமொத்த வடகிழக்கே வறுமையில் பின் தங்கிய நிலையில் மூழ்கி அழிந்தது.

அந்தப்பாதிரியார் என்னிடம் கண்ணீருடன் சொன்னார் 'நான் செய்தது சேவை அல்ல, படுகொலை! அது 18 ஆண்டுகள் கழித்து எனக்குத்தெரிந்தது'

*

*இந்த நிதிப்பிள்ளைகளை நான் ஒட்டுமொத்தமாக நிராகரிக்கவில்லை. அவர்களை எவ்வகையிலும் அவமதிக்கவும் இல்லை. அவர்கள்தான் என்னை அவமதிக்கிறார்கள்*

*நான் சொல்வது இவையே*

*1. இவர்கள் அடைந்த நிதி, சென்ற கருத்தரங்குகள், இவர்களை முன்வைக்கும் தன்னார்வக்குழுக்கள் மற்றும் கலாச்சார அமைப்புகள் ஆகியவற்றின் செயல்பாடுகளுடன் இணைத்து இவர்களின் கருத்துக்களை புரிந்துகொள்ளவெண்டும்*

*2 இவர்களை தனிப்பட்ட சிந்தனையாளர் அல்லது எழுத்தாளர்களாக கருதக்கூடாது. இவர்கள் ஒரு கருத்தியல் வலையின் கண்ணிகளாக கருதவேண்டும்*

*3 கைக்காசைப்போட்டு சிற்றிதழும் கருத்தரங்குகளும் சந்திப்புகளும் நடத்துபவர்கள், அலுவலகத்தில் முதுகொடிய வேலைசெய்தபின் எஞ்சிய நேரத்தில் இலக்கியம் ஆக்குபவர்கள், வறுமையில் நிற்பவர்கள், தன் உழைப்பில் வாழ்ந்து இலக்கியம் ஆக்குபவர்களால் கட்டி எழுப்பப்பட்டது தமிழ் சிற்றிதழ்சார் அறிவுலகம். அவர்களுக்கு எந்த நிதியும் வந்துசேர்வதில்லை.*

*இந்த நிதிப்பிள்ளைகள் கொஞ்சம் கொஞ்சமாக சிற்றிதழ் சார்ந்த அறிவியக்கத்தை கைப்பற்றிக்கொண்டிருக்கிறார்கள். அதிலிருந்து விடுபட இந்த தெளிவு நமக்குத்தேவை. அவ்வளவுதான்.*

## *6) அந்நிய நிதி- தொகுப்புரை*

*இந்த தொடர்கட்டுரைகள் வழியாக சில அடிப்படை ஆதாரங்களை அளித்திருக்கிறேன். அந்நிய நிதிக்கொடைகள் உருவாக்கும் அறிவுலகச்செல்வாக்கு பற்றிய என்னுடைய கட்டுரைகளுக்கெல்லாம் பொதுவாக 'பூச்சாண்டி காட்டுகிறார்' என்றும் 'அடிப்படை ஆதாரமில்லாத குற்றச்சாட்டு' என்றும்தான் பதில் சொல்லிவந்திருக்கிறார்கள்*

*இந்திய உளவுத்துறையே எளிதில் கண்டடையமுடியாத ஆதாரங்களை எழுத்தாளர்கள் சொல்லவேண்டும் என்று வாதிடுவதன் சமாளிப்பை புரிந்துகொள்ள அதிக சிந்தனைவளமெல்லாம் தேவை இல்லை.இங்கே நான் அளித்துள்ளவை குறைந்தபட்ச ஆதாரங்கள். விரிவாக ஆராய விரும்புபவர்கள் இந்த வழியே நெடுந்தூரம் செல்லலாம்*

*இந்த ஆதாரங்களில் இருந்து தெளிவாகக்கூடியவை சில*

*1. இந்தியாவிலும் கீழைநாடுகளிலும் அந்நிய நிதிக்கொடைகளின் அறிவுத்தள ஊடுருவல் மற்றும் அழிவுகள் குறித்த செய்திகள் என் அச்சங்களோ ஊகங்களோ அல்ல. அவை இத்துறையின் முன்னோடி அறிஞர்களால் மிக மிக விரிவாக எழுதப்பட்டவை. தகவல்களுடன் விவாதிக்கப்பட்டவை*

*2 மூலத்தைக் கண்டையடையவே முடியாத அந்நிய அமைப்புகளில் இருந்து சிக்கலான வழிகளினூடாக வரும் நிதி இந்தியாவின் சிந்தனைத்தளத்தில் நுழைந்துகொண்டே இருக்கிறது. தன்னார்வக்குழுக்கள், ஆய்வுகளுக்கான நல்கைகளை அளிக்கும் அமைப்புகள், பல்கலைகழக ஒத்துழைப்புகள், சர்வதேச பண்பாட்டமைப்புகள் என இவற்றின் திசைகள் பல*

*3 இந்த அந்நிய நிதிக்கொடைகள் வழியாக சில அடிப்படைக் கருத்துக்கள் எங்கோ எவராலோ உருவாக்கப்பட்டு இங்குள்ள அறிவுத்துறைகளில் விதைக்கப்படுகின்றன.*

*4 கண்ணுக்குத்தெரியாத ஒரு வலையாக இந்த நிதிபெறுபவர்கள் இணைந்து செயல்பட்டு அந்தக் கருத்துக்களை நம் சிந்தனையில் நம்மை அறியாமலேயே நிறுவிவிடுகிறார்கள்*

*5 அச்சிந்தனைகள் பின்னர் கலைச்சொற்களாகவும் சொற்றொடர்களாகவும் எளிமைப்படுத்தப்பட்டு பொதுமக்களிடையே சென்று சேர்கின்றன. இவ்வாறாக நம் சிந்தனையையே கட்டுப்படுத்தி கொண்டுசெல்கின்றன. இவற்றைப்பற்றிய பிரக்ஞையே நம்மிடம் இருப்பதில்லை*

*6.ஊடகங்கள் இந்நிதியமைப்புகளின் நிதிவாங்கியவர்களால் நிறைக்கப்பட்டிருப்பதனால் இந்த தரப்பின் கருத்துத்தளச் செல்வாக்கு அபரிமிதமானது. அவற்றை எதிர்ப்பவர்களை முத்திரைகுத்தி அவதூறுசெய்து ஒழிக்க இவர்களின் கூட்டமைப்பால் எளிதில் முடிகிறது.*

*7.ஆய்வுகள் என்றபேரில் இவை அளிக்கும் நிதிக்கொடைகள் கீழைநாடுகளின் பண்பாட்டுச்செல்வத்தை ஆராய்வதற்கு அளிக்கப்படுவதில்லை.மாறாக அவர்களின் சமூகப்பிளவுகளை ஆராயவும். சமூக உட்கூறுகளை ஆராயவும்தான் அளிக்கப்படுகின்றன. மேலதிகமாக அவர்களின் பழைமையான அறிவியலையும் வாழ்க்கைக்கூறுகளையும் ஆவணப்படுத்தவும் அளிக்கப்படுகிறது*

*8.விளைவாக இந்திய அரசுக்கே தெரியாத அளவுக்கு மிகநுட்பமான இந்திய சமூகச்சித்திரம் எங்கோ எவருக்கோ சென்று சேர்கிறது.*

*9.அத்துடன் இந்தியாவின் மரபையும் பண்பாட்டையும்பற்றிய எதிர்மறையான கசப்பூட்டும் கருத்துக்கள் இங்கே உருவாக்கப்பட்டு உலகமெங்கும்ம் கொண்டுசெல்லப்படுகின்றன. காலப்போக்கில் இந்த கசப்பு நம் சிந்தனைகளில் முழுமையாகவே பரவி ஒரு வெற்றிகரமாக சமூகமாக கூடிவாழவே முடியாதபடி ஆகிறது. இந்தியா, இந்திய மரபு, இந்தியப்பண்பாடு குறித்த ஆழமான கசப்புகள் இவ்வாறு விளைவிக்கப்படுகின்றன*

*10 இக்கருத்துக்களை அறிந்து புரிந்துகொள்ள நிதிபெற்ற அமைப்புகள், எழுத்தாளர்கள், அவற்றுக்கு நெருக்கமானவர்கள் ஆகியவர்களை நாம் அறிந்தாகவேண்டியிருக்கிறது*

*ஜெ*

## *7) அன்னியநிதியும் போலிச்சிந்தனைச்சூழலும்*

*அன்புள்ள ஜெ,*

*இந்த ராஜன் குறை விவகாரத்தில் முக்கியமான அம்சமாக இருப்பது அன்னிய அமைப்பு ஒன்றின் நிதி. அந்த நிதிக்காகவே இந்த ஆய்வுசெய்யப்பட்டுள்ளது. ஜெயரஞ்சன் நடத்திய ஒரு என்.ஜி.ஓ அமைப்புக்காக ராஜன் குறை இந்த ஆய்வை நடத்தியிருக்கிறார். 'அமெரிக்க நிறுவனத்துக்காக மார்க்ஸிய ஆய்வு' என்ற வேடிக்கை நடந்திருக்கிறது. இங்கே ஏகாதிபத்திய எதிர்ப்பு பேசுபவர்கள் எவருக்கும் அதில் எந்த விமர்சனமும் இல்லை.*

*என் கேள்வி என்னவென்றால் இந்த நிதி ஏன் அளிக்கப்படுகிறது? அவர்கள் இதனால் அடைவது என்ன என்பதுதான்?*

*எம்.ராஜேந்திரன்*

*****

*அன்புள்ள ராஜேந்திரன்,*

*1991 ல் முதல் முறையாக இதை நான் விரிவாக எழுதினேன். அதன்பின் இருபது தடவைக்குமேல் எழுதியிருக்கிறேன். சொல்லப்போனால் தமிழ்நாட்டில் இதைச் சுட்டிக்காட்டி ஓயாமல் எழுதிவருபவன் நான் மட்டுமே. இப்போதுதான் தர்மராஜ் போன்றவர்கள் எழுதுகிறார்கள்- இன்னும் விரிவாக.*

*1988ல் நான் பி.கே.பாலகிருஷ்ணனைச் சந்தித்தபோது இந்த நிதியுதவிகளின் சர்வதேச அரசியலைப்பற்றி அவர் என்னிடம் சொன்னார். அன்று அவர் அளித்த ஓர் அறிக்கையை நான் கையால் நகலெடுத்துக் கொண்டேன்.[அப்போது ஜெராக்ஸ் பரவலாக இல்லை] அதன் பல பகுதிகளை அன்று எழுதிய கட்டுரையில் மேற்கோள் காட்டியிருக்கிறேன்.*

பழைய கட்டுரை ஒன்றில் இருந்து அந்த மேற்கோளை மீண்டும் எடுத்தேன். *Perspective of recent American Anthropology*. பிரபல அமெரிக்க மானுடவியலாளரான Cora du Bois எழுதியது. அதில் 1970களில் அமெரிக்க மானுடவியலில் நடந்த பொருந்தா வீக்கம் பற்றிச் சொல்கிறார். 1947ல் அமெரிக்க மானுடவியல் கழகம் [American Anthropological Association] கிட்டத்தட்ட 400 உறுப்பினர்களை கொண்டிருந்தது. 1975ல் அதன் உறுப்பினர் எண்ணிக்கை 5000. இந்த வளர்ச்சி மிகையான நிதியுதவியால் வருவது. மானுடவியல் தரவுகளை விரும்பும் வணிகநிறுவனங்களின் தேவைக்கேற்ப இந்த ஆய்வுகள் செய்யப்படுவதனால் நிதி வருகிறது என்கிறார்.

இந்த நிதியுதவிகளைச் செய்பவை அமெரிக்கப் பல்கலைக் கழகங்கள் அல்லது ஆய்வுநிறுவனங்கள். அவற்றுக்கு நிதி எங்கிருந்து வரும்? பெரும்பாலும் அவை வணிகநிறுவனங்களால் அளிக்கப்படுகின்றன. எல்லா ஆய்வுகளுக்கும் வணிகநிறுவனங்களின் நிதியே அளிக்கப்படுகிறது.

வணிகநிறுவனங்கள் எப்படி நிதி அளிக்கின்றன? ஒன்று அந்த ஆய்வின் தரவுகள் அவர்களின் வணிகத்திற்கு தேவையானவையாக இருக்கும். அல்லது அந்த வணிகநிறுவனத்திற்கு அமெரிக்க உளவமைப்பின் நிதி அளிக்கப்பட்டு அது ஆய்வுநிறுவனங்களுக்கு அளிக்கப்படும்

இப்படி வரும் நிதி இங்கே பற்பல சிறுஆய்வு அமைப்புகள், என்.ஜி.ஓக்களுக்கு வந்து சேர்கிறது. அவர்கள் ஆய்வுசெய்து தரவுகளை அனுப்புகிறார்கள். இது ஒருவகையான மூலப்பொருள் திரட்டல் மட்டும்தான். இது ஒரு குடிசைத்தொழில். பல ஆயிரம்பேரின் பிழைப்பு

இந்த ஆய்வுகள் எப்படி நடைபெறவேண்டும், எந்த கோணத்தில் நடைபெறவேண்டும் என்பதை அந்த ஆய்வுநிறுவனமே வகுக்கிறது. பலசமயம் என்ன முடிவுகள் சொல்லப்படவேண்டும் என்பதையும் முன்னரே வகுத்து அளிக்கிறது.

தமிழகத்திலோ இந்தியாவெங்கிலுமோ எந்த ஒரு மலைக்கிராமத்திற்குச் செல்லுங்கள், அங்கே இந்த 'ஆய்வு' நிகழ்ந்திருப்பதை காணலாம். முன்பு எஸ்.ராமகிருஷ்ணன் ஒரு பழங்குடி கிராமத்திற்குச் சென்றபோது ஒரு வெள்ளைக்கார இளைஞன் அந்த கிராமம் அவன் ஆய்வின்பொருட்டு அவன் கட்டுப்பாட்டில் இருப்பதாகச் சொல்லி அவரை

விரட்டியதைப் பற்றி எழுதியிருந்தார்.எனக்கும் கேரளத்தில் அந்த அனுபவம் அமைந்ததுண்டு

இந்த 'ஆய்வுகள்' அவர்களுக்கு எதற்கு? அதை நம்மால் முழுமையாகப் புரிந்துகொள்ளவே முடியாது. இவை உலகம் முழுக்க நடைபெறுகின்றன. பல்லாயிரம் தரவுகள் வந்து அவர்களிடம் குவிகின்றன. அவற்றை அவர்கள் ஆய்வுசெய்து தேவைக்கேற்ப பயன்படுத்திக்கொள்கிறார்கள். அதற்கு வேறு நிபுணர்கள், உண்மையான அறிஞர்கள், இருப்பார்கள்

தகவல்களே இன்று உலகை ஆள்கின்றன. ஐரோப்பா- அமெரிக்காவின் ஆதிக்கம் தரவுகளால் ஆனது. அதை உலகம் முழுக்க இருந்து சுரண்டிச் சேகரித்து அனுப்புவதே இந்த மாபெரும் வலைப்பின்னலின் பணி.

இந்தத் தரவுகள் நுகர்வோரின் ரசனையையும் தெரிவுகளையும் உணர்வதற்குப் பயன்படலாம். ஒரு வணிகப்பொருளின் சர்வதேசத் தேவையை கணிக்க இவற்றை பயன்படுத்தலாம். இன்று கூகிள் வந்தபின் தொழில்நுட்ப உலகுக்குள் வந்துவிட்டவர்களின் ரசனையும் தெரிவும் வேறுவகையில் சேகரிக்கப்பட்டுவிடுகிறது. மலைப்பழங்குடிகள், குடிசைவாழ் மக்கள் ஆகியோரின் மனநிலையை இந்த மானுடவியல் ஆய்வுகள் வழியாகவே அவர்கள் அறிந்துகொள்ளமுடியும்

இந்தியா உள்ளிட்ட மூன்றாமுலக நாடுகளின் அரசியலின் உள்ளோட்டங்களை, அதிகாரச் சமநிலைகளை புரிந்துகொள்ளவும் இந்த தரவுகள் பயன்படுத்தப்படலாம். தேவையானபோது உள்ளே நுழைந்து இங்குள்ள அரசியலதிகாரத்தில் விளையாடவும் இவற்றை பயன்படுத்தலாம். இந்த தரவுகளை கையில் முறையாக பகுப்பாய்வு செய்து வைத்திருப்பவர்கள் நினைத்தால் ஒரு மதக்கலவரத்தை, சாதிக்கலவரத்தை எளிதாக உருவாக்கலாம்.

உதாரணமாக ஆப்ரிக்காவின் இனக்குழு அரசியல் முழுக்கமுழுக்க இந்தவகையான மானுடவியல் ஆய்வாளர்கள் அளித்த தரவுகளின் அடிப்படையில் ஐரோப்பாவால் கட்டுப்படுத்தப்படுகிறது. ஆப்ரிக்காவின் கனிமங்கள்மேல் ஐரோப்பா இப்படித்தான் அதிகாரத்தை அடைகிறது.

ஆய்வு என்பது வணிக- பொருளியல் மேலாதிக்கம் உள்ளே நுழைவதற்கான வழிகளில் முக்கியமானது. இது எப்படி நடைபெறுகிறது என்பதை அறிய ஒரு பொருளாதார அடியாளின் வாக்குமூலம் படித்துப்பாருங்கள்.

அனைத்தையும் விட நுட்பமானது, இங்கே என்ன சிந்திக்கப்பட வேண்டும், என்னென்ன விவாதங்கள் நிகழவேண்டும் என்பதை இந்த நிதியுதவிமூலம் கட்டுப்பாட்டில் வைத்திருக்கலாம். இந்த நாடகக்காதல் என்பதே அமெரிக்க நிறுவனமான International Centre For Research on Women, Washington DC [https://www.icrw.org/] உருவாக்கியதாகக்கூட இருக்கலாம். ராஜன் குறையும் ஜெயரஞ்சனும் அவர்களின் கருவிகளாக இருக்கலாம். அவர்கள் இப்படி நிதிவாங்கிய நிறுவனங்கள் என்ன, அவற்றின் பின்னணிகள் என்ன, அவற்றின் நிதியாதாரம் என்ன என்பதெல்லாம் நம்மால் ஒருபோதும் சென்று தொடமுடியாத ரகசியங்கள்.

இந்த அழிவைத்தான் நான் சுட்டிக்காட்டிக் கொண்டே இருக்கிறேன். நமக்கு இங்கே பிரச்சினைகள் உள்ளன. நமக்கு கல்வியும் உள்ளது. நாமே முட்டிமோதி நமது எல்லைகளுக்குள் இருந்துகொண்டே சிந்தனைகளை உருவாக்கமுடியும். கொள்கைகளை வகுக்க முடியும். தீர்வுகளை கண்டடைய முடியும்.

ஆனால் இந்த அன்னியத்தூண்டல் வழியாக நம் சிந்தனைகள் தொடர்ச்சியாக குலைக்கப்படுகின்றன. நாம் சிந்திக்கவே முடியாதபடி ஆக்கப்படுகிறோம். அன்னிய நிதியின் இந்த அறிவுக்கருவிகள் நம் சூழலில் சலிக்காமல் சத்தம் போட்டுக்கொண்டே இருக்கிறார்கள். போலிக்கொள்கைகளை கொண்டுவந்து கொட்டுகிறார்கள். போலி நூல்களை மேற்கோளாக்கிக் கொண்டே இருக்கிறார்கள். மெய்யான சிந்தனைகளை தூற்றுகிறார்கள். இலக்கியப்படைப்புக்களை திரித்து வாசிப்பு நிகழாதபடி செய்கிறார்கள். சிந்திப்பவர்களை வசைபாடி அவதூறுசெய்து நிலைகுலைய வைக்கிறார்கள்

இந்தியா இன்னும் தாக்குப்பிடிப்பதே ஆச்சரியம்தான். ஆப்ரிக்காவும் ஆசியாவின் பலநாடுகளும் இந்த அன்னியநிதித் தாக்குதல்களால் சொந்தமாக எதையுமே சிந்திக்க பேச முடியாதவையாக ஆகிவிட்டிருக்கின்றன.

அதைவிட ஒன்று உண்டு, இன்று நாம் ஆப்ரிக்கா பற்றி என்னென்ன அறிகிறோமோ எல்லாமே இவ்வாறு அங்கு திணிக்கப்பட்ட ஆய்வாளர்கள் உருவாக்கிய கருத்துக்களையும் சித்திரங்களையும்தான். இங்கே தலித் வாழ்க்கை எப்படி இருந்தாலும்

*சரி, வெளியே தலித் இளைஞர்களை பற்றி உலகம் அறிவது ராஜன் குறை, ஜெயரஞ்சன், எம்.எஸ்.எஸ்.பாண்டியன் கூட்டணி உருவாக்கிய சித்திரத்தைத்தான்.*

*அந்தச்சித்திரம் அவர்களுக்கு அமெரிக்க ஆய்வுநிறுவனத்தால் அளிக்கப்பட்டது. தலித்துக்கள் அமெரிக்க ஆப்ரிக்கர்களைப்போல ஒருவகையான 'குற்றகரமான ஆணாதிக்க நோக்கு' கொண்டவர்கள் என அந்த ஆய்வுநிறுவனம் வழிகாட்ட இவர்கள் ஆய்வுநடத்தி ஆதாரம் திரட்டி அளிக்கிறார்கள். அக்கட்டுரை உலகமெங்கும் 88 முறைக்குமேல் முக்கியமான ஆவணங்களில் மேற்கோள் காட்டப்பட்டுள்ளது.*

*இந்த கருத்தை ஏன் அவர்கள் உருவாக்கி உலகளாவ பரப்பி நிலைநாட்டுகிறார்கள் என நம்மால் உணர முடியாது. ஆனால் விளைவை அறியலாம். தமிழகத்தின் சாதிய உறவு எப்போதைக்குமாகச் சீரழிந்துவிட்டது. நாடகக்காதல் என்ற கருத்து இங்கே நிலைநிறுத்தப்பட்டுவிட்டது.*

*இந்த நிதிவலையில் வலதுசாரி அமைப்புக்கள், குறிப்பாக இந்துத்துவ அமைப்புக்களும் உண்டு. அது சார்ந்த தரவுகள் இப்போதுதான் வருகின்றன சென்ற பதினைந்தாண்டுகளில் பல இந்துத்துவ அமைப்புக்கள் அமெரிக்க ஐரோப்பிய அமைப்புக்களின் நிதிகளை பெற்றுக்கொள்கின்றன என்று சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. இந்த அமைப்புக்களால் ஒருவகை 'அரசியல் இந்துத்துவம்' உருவாக்கப்படுகிறது. இந்த நியோஇந்துத்துவம் இந்துமதத்தின் பன்மைத்தன்மைக்கு எதிரானது, இந்து மதத்தை ஓர் அரசியல் கொள்கையாகச் சுருக்குவது.*

*[சென்றமுறை இந்த நிதிவலை பற்றி நான் எழுதியபோது எந்தெந்த அன்னியநிதிபெறும் அமைப்புகளைப் பற்றி குறித்தேனோ அவற்றில் பல இன்றைய ஆட்சிக்கு நெருக்கமானவையாக மாறிவிட்டிருக்கின்றன.]*

*ஆனால் இப்போதும் அன்னியநிதியின் முக்கியமான இலக்கு ராஜன் குறை போன்ற போலி இடதுசாரிகளை உருவாக்கி இடதுசாரிக் கருத்துக்களுக்குள் ஊடுருவுவதே. அவை ஒட்டுமொத்தமாகவே இங்குள்ள இடதுசாரிச் சிந்தனைகளை கடத்திக்கொண்டு சென்றுவிடுகின்றன. அமெரிக்க எதிர்ப்பு பேசிக்கொண்டே அமெரிக்க நிதிபெற்று செயல்படுவது இங்கே மிகச் சாதாரணமாகவே பார்க்கப்படுகிறது.*

நான் தொடர்ச்சியாக இதைச் சுட்டிக் காட்டிக் கொண்டே இருக்கிறேன். எப்போதுமே தன்னல அரசியல் இம்மாதிரி உண்மைகளை கருத்தில் கொள்வதில்லை. உண்மை சொல்பவனை எதிரியாக முத்திரை குத்திவிட்டால் போதும். மூர்க்கமான கட்சிகட்டலின் நடுவே உண்மை நசுங்கிவிடும்.

திரும்பவும் சொல்கிறேன், நாம் இங்கே சிந்திப்பதை வேறு எவரோ அவர்களின் வணிக அரசியல் விரிவாக்கத்தின் பொருட்டு கையாள்கிறார்கள். நம்மால் இன்றைய சூழலில் அதை கட்டுப்படுத்தவே முடியாது. ஆனால் குறைந்தபட்சம் நமது மூளையையாவது சுதந்திரமாக வைத்துக்கொள்வோம்.

ஜெ

*****